# அம்ருதா
AMRUDHA

வேள்வி 14 கலசம் 161
Volume 14 Issue 161

டிசம்பர் 2019 ரூ. 25
December 2019 Rs.25

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
A Monthly Magazine of Art, Literature and Social Criticism












## கருணை உணர்வில் இருந்தே நகைச்சுவை பிறந்திருக்க வேண்டும்!

சார்லி சாப்ளின்

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்




Rs. 140




Rs. 130




Rs. 170




Rs. 110




Rs. 200




Rs. 100




Rs. 80




Rs. 90




Rs. 90

**அம்ருதா**

#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 73387 57878, 94440 70000,
**மின்னஞ்சல்:** info.amrudha@gmail. com, **இணையதளம்:** www. amruthamagazine. com

கேள்வி 14 கலசம் 161

# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

டிசம்பர்-2019 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**




**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: 044 2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்

# ஆட்சியாளர்கள் உணர வேண்டும்!

பிரபு திலக்

இந்தியா முழுவதும் வேலை வாய்ப்பின்மை மீண்டும் பெரும் பிரச்சினையாக உருவெடுத்துள்ளது. கடந்த 45 ஆண்டுகளில் இல்லாத அளவிற்கு இன்று வேலையின்மை உள்ளது என தேசிய புள்ளிவிவர ஆணையம் அறிக்கை தெரிவிக்கிறது. 2011-12 தொடங்கி 2017-18 வரையிலான ஏழு நிதியாண்டுகளில் மட்டும் சுமார் 90 லட்சம் பேர் வேலை வாய்ப்பைப் பறிகொடுத்ததோடு, வேலைக்கான புதிய வாய்ப்புகள் ஏதும் கிடைக்காமலே இருப்பதாக, பெங்களூரு அசிம் பிரேம்ஜி பல்கலைக்கழகத்தின் ஆய்வு முடிவுகள் கூறுகிறது.

மேலும், தேசிய மாதிரி கருத்துக் கணிப்பு மையம் (NSSO), இந்திய பொருளாதார கண்காணிப்பு மையம் (CMIE), உலகளவில் வர்த்தக பொருளாதாரத்தைக் கண்காணித்து வரும் 'டிரேடிங் எக்னாமிக்ஸ்' நிறுவனம் என வேலைவாய்ப்பு சம்பந்தமான ஆய்வுப் பணிகளை மேற்கொண்டு வரும் பெரும்பாலான நிறுவனங்களும் கடந்த காலங்களைக் காட்டிலும் தற்போது இந்தியாவில் வேலையின்மை விகிதம் கவலை தரும் அளவுக்கு உயர்ந்துள்ளதை உறுதிப்படுத்தியுள்ளன. 1970 தொடங்கி 2000ஆம் ஆண்டு வரையிலான 30 ஆண்டுகள் காலகட்டத்தில் வேலை வாய்ப்பின்மை விகிதம் சரசியாக 3% என்றிருந்த சூழலில், அதன்பின்னர் படிப்படியாக உயர்ந்து கடந்த 2018இல் மட்டுமே 6.10% சதவிகிதத்தை எட்டியுள்ளது. தற்போது இது 7.7 சதவிகிதமாக எகிறியுள்ளது. குறிப்பாக உற்பத்தித் துறையில் 5.7 சதவிகிதம் அளவிற்கு வேலைவாய்ப்பின்மை அதிகரித்துள்ளது. இது இந்திய பொருளாதாரத்திற்கு உகந்தது அல்ல என்றும் 'இந்திய பொருளாதார கண்காணிப்பு மையம்' எச்சரித்துள்ளது.

"ஒருவர் வேலை செய்ய தயாராக இருந்து, அவருக்கு வேலை செய்வதற்கான வாய்ப்பு கிடைக்காமல் இருப்பதே வேலை வாய்ப்பின்மை என சொல்லப்படுகிறது. அதன்படி, உலகளவில் வேலை வாய்ப்பின்மை நாடுகளின் பட்டியலில் இந்தியா 90ஆவது இடத்தில் உள்ளது. ஆசிய அளவில் 15ஆவது இடத்தில் உள்ளது. தற்போது இந்தியாவில் வேலைக்குத் தகுதியான நகர்ப்புற இளைஞர்களில் 8.3 சதவிகிதத்தினரும், கிராமப்புற இளைஞர்களில் 7.3 சதவிகிதத்தினரும் வேலையில்லாமல் இருக்கிறார்கள். 20 முதல் 24 வயது வரை உள்ள இளைஞர்களில் 60 சதவிகிதத்தினர் வேலை வாய்ப்பில்லாமல் இருக்கின்றனர். ஆண்டுக்கு சராசரியாக 1.2 கோடி பேர் என்ற எண்ணிக்கையில் இந்தியாவில் வேலை தேடுபவர்களின் எண்ணிக்கை உயர்ந்து வருகிறது. தமிழகத்தில் மட்டும் வேலை வாய்ப்பகத்தில் பதிவு செய்து சுமார் 90 லட்சம் பேர் காத்திருக்கிறார்கள். இன்னொரு பக்கம், 39 கோடிக்கும் மேற்பட்டவர்கள் இந்தியாவில் அவர்களது கல்வித் தகுதிக்கு இணையற்ற வேலையை செய்து வருகின்றனர். அதாவது, படிப்புக்கான வேலை கிடைக்காததால், அன்றாட செலவுகளை சமாளிக்க கிடைத்த வேலையை செய்து வருகின்றனர்" என ஆய்வறிக்கைகள் தெரிவிக்கின்றன.

இந்த புள்ளி விவரங்களை மறுத்து வந்தாலும் மத்திய அரசு இதன் அபாயங்களை உணராமல் இல்லை. 2019 மக்களவை தேர்தலில் பெரும்பான்மை பலத்தோடு வெற்றிபெற்று இரண்டாவது முறையாக நரேந்திர மோடி பிரதமரானவுடனே, அமைச்சரவை கூட்டத்தைக் கூட்டி முதலீடுகளைப் பெருக்குவதற்கும், வேலை வாய்ப்பை உருவாக்குவதற்குமான குழுக்களை துறை சார்ந்த அமைச்சர்களின் தலைமையில் அமைத்தார். பத்து கேபினட் அமைச்சர்கள், இந்த குழுவை நிர்வகிக்கும் உறுப்பினர்களாக பணியமர்த்தப்பட்டனர். ஆனாலும், நிலை சரியாகவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

நகர்ப்புறங்களை காட்டிலும் ஊரக பகுதிகளில் பெண் தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்புகள் குறைவாகவே உள்ளது. அதை ஈடுசெய்யும் வகையில்தான் நூறு நாள் வேலைத் திட்டம் முந்தைய அரசால் அமல்படுத்தப்பட்டது. பொருளாதார நெருக்கடியைக் காரணம் காட்டி அந்த திட்டத்திற்கான நிதி ஒதுக்கீட்டை தற்போது ஆட்சியாளர்கள் குறைத்துள்ளனர். மேலும், வேலை நாட்களைக் குறைப்பது, திட்டத்திற்கான வழிகாட்டு நெறிமுறைகளைக் கடுமையாக்குவது என மறைமுகமாக அதற்கு மூடுவிழா நடத்தும் வேலைகளையும் மத்திய அரசு மேற்கொண்டு வருகிறது. இதனால், ஊரகப் பகுதிகளில் கூலி தொழிலாளர்கள் பெரிதும் பாதிக்கப்படுகின்றனர். இதுபோலத்தான் மற்ற துறைகளிலும் பாதிப்புகள் உள்ளன.

இந்தியப் பொருளாதாரம் பெரு வீழ்ச்சி அடைந்து வருவதின் அறிகுறியாகவும் இந்த வேலை வாய்ப்பின்மை உள்ளது குறிப்பிடத்தக்கது. வேலையின்மை, தொழில்துறையின் வீழ்ச்சி,




பொருளாதாரத்தின் வீழ்ச்சி என்பதெல்லாம் எப்போதைக் காட்டிலும் அதிகமாக்கியுள்ளது அன்றாட செய்தியாகியுள்ளன. எதிர்காலம் மிகப் பெரிய சோதனைக் களமாக இருக்கும் என்பதையே இந்த நிலை உணர்த்துகிறது.

இது சமூகப் பிரச்சினையாகவும் உருவெடுக்கும். ஒருவர் வேலை யிழக்கிறார் என்றால், அவர் வாங்கியுள்ள கடன்களுக்கான தவணைத் தொகை, வீட்டு வாடகை, குழந்தைகள் பள்ளி அல்லது கல்லூரி கட்டணம் என ஒவ்வொன்றும் நெரிக்கத் துவங்கிவிடும். திடீரென்று பள்ளத்தில் விழுந்துவிட்ட உறுத்தல் மன உளைச்சலாக மாறும். உடல் நலம் பாதிக்கப்படும். பெருகிவரும் வேலையின்மை காரணமாக, படித்த நிராதரவு நிலையில் இருக்கும் பெரும்பாலான இளைஞர்களை சமூக விரோதச் செயல்களை நோக்கி நகரும் ஆபத்து உள்ளது. ஆம், வேலை யின்மை பெருகப் பெருக சமூகக் குற்றங்கள் பெருகும்.

“இது மோசமான அறிகுறி. இந்தியாவின் பொருளாதாரம் தற்போது நிலையாக இல்லை. இதை சரி செய்ய உடனே அரசு உரிய நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். இந்திய பொருளாதாரம் மோசமான நிலையில் இருப்பதை முதலில் அரசு ஏற்க வேண்டும். அதை அரசு ஒப்புக்கொண்டு நடவடிக்கையில் இறங்க வேண்டும். மக்களிடம் வாங்கும் சக்தி குறைந்துவிட்டது. இதுபோன்ற விஷயங்கள் எப்போதாவதுதான் நடக்கும். இப்போது நடந்து வருகிறது. இப்போது தற்காலிக தேவையை பூர்த்தி செய்ய வேண்டுமானால் பணம் இருக்குமே தவிர எதிர்காலத்திற்கு இருக்காது” என்று இந்த ஆண்டு பொருளாதாரத்திற்கான நோபல் பரிசு பெற்ற இந்தியரான அபிஜித் பானர்ஜி கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது.

பொருளாதார வல்லுநரும் இந்திய முன்னாள் பிரதமருமான மன்மோகன் சிங், இதுபற்றி கூறியுள்ளதும் கவனிக்க வேண்டியது. “இந்தியாவின் பொருளாதார நிலை ஆழமான கவலையைத் தருகிறது. மொத்த உள்நாட்டு உற்பத்தி கடந்த 15 ஆண்டுகளில் இல்லாத அளவு கீழே போயுள்ளது. வேலையின்மை 45 ஆண்டுகளில் இல்லாத அளவு அதிகமாக உள்ளது. வீட்டு நுகர்வு 40 ஆண்டுகளில் இல்லாத அளவு கீழே போயுள்ளது. வங்கி வாராக் கடன் எப்போதும் இல்லாத அளவு உச்சத்தில் உள்ளது. மின்சார உற்பத்தி வளர்ச்சி 15 ஆண்டுகள் இல்லாத அளவு குறைந்துள்ளது.

இதுபோலகீழேபோயிருப்பவற் றின், அதிகமாயிருப்பவற்றின் பட்டியல் நீள்கிறது. வருத்தம் தரும் இத்தகைய புள்ளிவிவரங்களால் பொருளாதார நிலை கவலை தருகிறது என்று கூறவில்லை. நாட்டின் பொருளாதாரத்தைப் பாதிக்கும் மேலும் ஆழமான சிக்கலின் வெறும் வெளிப்பாடுகள் மட்டுமே இவை” என்று எச்சரிக்கிறார் மன்மோகன் சிங்.

ஆட்சியாளர்கள் மற்ற அஜெண்டாக்களை ஒதுக்கி வைத்துவிட்டு, இதில் அதிக கவனம் செலுத்த வேண்டும் என்பதையே வெளிவரும் புள்ளி விவரங்கள் காட்டுகின்றன. பொருளாதாரம் புத்துயிர் பெறக்கூடிய வகையில் நடவடிக்கைகள் எடுத்து சமூகத்தில் மீண்டும் நம்பிக்கையை உருவாக்க வேண்டிய பொறுப்பு தங்கள் முன்னால் அவசர கோப்பாக உள்ளதை ஆட்சியாளர்கள் உணர வேண்டும். ●

# நட்சத்திரப் போராளி!






**கத்யானா அமரசிங்ஹ**

சிங்களத்தில் இருந்து தமிழில்:

**எம். ரிஷான் ஷெரீப்**

ஓவியம்: Cornelia Li


இதயத்தின் ஆழத்துக்கே ஊடுருவி, கழியும் ஒவ்வொரு கணமும் மீண்டும் மீண்டும் நினைவுக்கு வரும் பார்வையொன்றை நான் எப்போதாவது கண்டிருப்பேனெனில், அது இரண்டு தடவைகள் மாத்திரமே.

முதற்தடவை எனது அப்பா மரிக்கும் கணத்தில் என்னைப் பார்த்த பார்வை. மிகுந்த வேதனையால் நிறைந்திருந்த அவரது முகம் அவ்வேளையில் வெளிறிப் போயிருந்ததோடு அவர் எனது கையைப் பற்றியவாறு எதையோ கூற முயற்சித்தார். அக்கண்களில், நம் எவருக்கும் பாதுகாப்பற்ற இவ்வுலகில் என்னைத் தனியே விட்டுச்செல்ல முடியாத கவலை தேங்கியிருந்தது. மரணத்தின் வெண்ணிற உலகத்தில் கால் பதிக்கும் முன்பு அவர் அச்சத்தில் ஆழ்ந்திருந்தார்.

அதற்குப் பிறகு அவ்வாறான மறக்க முடியாத பார்வையை எனது காதலனிடமிருந்து நான் கண்டேன். அது நாங்கள் என்றென்றைக்குமாகப் பிரிந்த அந்த இறுதி நாளில். அவரது அந்தப் பார்வையில் கேள்வி, அதிர்ச்சி, ஏற்றுக்கொள்ள முடியாமை, திகைப்பு ஆகியவற்றோடு வலியும் படிந்திருந்தது. நான் அவரது தலையை துப்பாக்கியால் குறிபார்த்த கணத்தில், அவர் அந்தப் பார்வையால் என்னைப் பார்த்துக் கொண்டிருந்த போது, அக்கணமே துப்பாக்கியால் எனக்கே வேட்டு வைத்துக்கொண்டு செத்துப் போகத் தோன்றியது.

அவர் என்னைக் காதலுடன் முத்தமிட்ட நிமிடங்களை நான் மறந்திருப்பேன் என அவர் நினைத்திருக்கக் கூடும். இல்லை. நான் எதையும் மறக்கவில்லை. நான் முத்தமிட்ட போது அவரது கண்கள் காதலால் பூரித்திருந்த விதத்தையும் நான் மறக்கவில்லை. என் முன்னால் அந்த அனைத்து உணர்வுகளையும் கட்டுப்படுத்திக் கொண்டிருந்தவை அந்தக் கண்களே என்பதை நான் அறிந்திருந்தேன்.

எனினும், அவ்வேளையில் அங்கு நின்றிருந்தது நானல்ல. உண்மையாகவே நானல்ல. உள்ளே உணர்வுகளை அமுழ்த்தி மிதித்துப் போட்டிருந்த பிணமொன்றுக்கு ஒப்பான பெண்ணொருத்தி.

“அவருக்கு இப்படியான இடங்களுக்கு உன்னைத் தேடிக்கொண்டு வந்து தொந்தரவு தர வேண்டாமெண்டு சொல்லு. ஏன் அவர் சின்னப் பிள்ளை போல நடந்துகொள்கிறார்?”

அன்று அவர் என்னைத் தேடி வந்து பெரிய பிரச்சினையொன்றை உருவாக்கிக் கொண்டிருந்த போது மாலதி அக்கா கனத்த பார்வையோடு என்னிடம் உத்தரவிட்டாள். நான் அப்போது அலுவலகத்தின் உள்ளே இருந்தேன்.

அவளது உறுதியான குரலைக் கேட்டவாறு நான் ஒரு கணம் மௌனமாக இருந்தேன்.

உண்மையைக் கூறுவதானால் எனதுள்ளத்தில் அவர் மீது உதித்த சிறுபிள்ளைத்தனமான உணர்வுகளை வெளிப்படுத்தி, தனது பாட்டில் ஓர் ஓரமாகக் கிடந்த அவரை இந்தச் சிக்கலுக்குள் இழுத்துவிட்ட குற்றத்துக்கு பிரதானமாகப் பொறுப்பேற்க வேண்டியது நான்தான். காதலை வெளிப்படுத்துவதற்கு முந்திக்கொண்டது நான். அப்போது வரைக்கும் அவருக்கு என் மீது அவ்வாறான ஒரு உணர்வு தோன்றியிருக்கக்கூடுமெனக் கூற முடியாது. உண்மையில், அன்று, எனது சிறுபிள்ளைத்தனமான பழக்கவழக்கங்கள் வெளிப்பட்டு, அவர் முன்னிலையில் என்னால் எனது உணர்வுகளைக் கட்டுப் படுத்திக்கொள்ள முடியாமல் போய்விட்டது. அதன் பிறகு அதை இவ்வளவு தூரத்துக்கு இழுத்து வந்ததுவும் நான்தான். அதற்குரிய பரிகாரத்தை ஒருபோதும் அவர் செலுத்த வேண்டியதில்லை.

இயக்கத்தில் இணைந்திருந்த நாங்கள் உடனடித் தீர்மானம் எடுக்க பயிற்றுவிக்கப்பட்டிருந் தோம். வெளியுலகப் பெண்களுக்கு இருப்பது போல ஒரு வரிசையான ஒழுங்கில் பயணிக்கும் ஜீவிதம் எமக்கிருக்கவில்லை. எக்கணத்திலும் மரணம் எம்மைத் தேடி வருமென நாங்கள் நன்றாக அறிந்திருந்தோம்.

இவ்வுலகில் பிறந்த அனைத்து மனிதர்களுமே மரணிப்பது நியதிதான் என்றாலும் எம் அளவுக்கு அதற்குத் தயாராக இருப்பவர்கள் வேறு இருக்க இயலாது. எமது ஜீவிதம் அந்தந்தக் கணத்துக்கானது. அந்தக் கணத்தில் எடுக்க முடிந்த மிகவும் உசிதமான தீர்மானத்தை உடனடியாக எடுக்க என்னால் முடிந்தது அதனால்தான்.

எனவே, திடீரென நான் அந்த நடைப்பிணமாக மாறியிருந்தேன்.



நான் காதலித்த நபருக்காக என்னால் எடுக்க முடிந்த தீர்மானம் அது மாத்திரம்தான். அவர் மனதை சரிப்படுத்திக்கொண்டு என்னிடமிருந்து பிரிந்து செல்ல உதவுவது மாத்திரமே. ஆகவே நான் அதைச் செய்தேன்.

அவரது தலையை துப்பாக்கியால் குறி பார்த்தபோது, அவர் நான் முன்பு கூறிய பார்வையால் என்னை ஒரு நிமிடம் போலப் பார்த்திருந்து விட்டு, திரும்பிச் சென்றுவிட்டார். எனது இதயத்தில் முதல் சாவு நிகழ்ந்தது அன்றுதான்.

ஒரு போராளிக்குப் பொருத்தமற்ற விதத்தில், எனது கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடியதோடு, நான் உதடுகளைக் கடித்தவாறு, தரையில் முழந்தாளிட்டு, நிலத்தைக் கையால் சுரண்டி மண்ணைக் கையிலெடுத்தேன். இருண்ட கபில நிற மண்ணைத் தோண்டித் தோண்டி எனது புதைகுழியை வெட்டி அதில் சாய்ந்துகொள்வதே எனது தேவையாகவிருந்தது. உண்மையில் அக்கணமே செத்துப் போய்விடுவதே எனக்கு அவசியமாகவிருந்தது. அவர் எனக்களித்த ஜீவிதத்தை அவரே திரும்பவும் எடுத்துச் சென்றதோடு, பிரிவின் வேதனையிலும் கவலையிலும் எனது எலும்புகள்கூட பதறத் தொடங்கியது. எனது இரு கரங்களையும் எவரோ அன்று இறுக்கமாகப் பற்றிக் கொண்டிருந்திருக்காவிட்டால் அக்கணமே நான் தற்கொலை செய்து கொண்டிருக்க இடமிருக்கிறது.

“விசர் பிடிச்சவள் போல நடந்துகொள்ளாதே” என செல்வமலர் காதில் கூறுவது கேட்டது. நான் விம்மியழுதவாறு இருந்ததோடு அவள் எனதுவாயைப் பொத்தி என்னைத் திட்டினாள்.

“ஒருத்தனுக்காக செத்துப்போற அளவுக்கு நீ இவ்வளவு சின்னப் பிள்ளைத்தனமா இருப்பாயெண்டு நினைக்கேல்ல.”

நான் எழவில்லை. எனது

கால்கள் உயிரற்று நடுங்கியவாறு இருந்தன. அவரது அந்தப் பார்வை எனது கண் முன்னால் தோன்றிக் கொண்டேயிருந்ததோடு நான் வேட்டுப்பட்டது போல வலியோடு நெஞ்சைப் பிடித்துக்கொண்டேன்.

கடவுளே, பிரிவால் எவரையும் இந்தளவு வலிக்கச் செய்ய முடியுமா?

செல்வமலர் என்னை உள்ளே இழுத்துச் சென்றாள். மாலதி அக்கா என்னருகே வந்தபோது, செல்வமலர் எனக்கு அழுகையை நிறுத்தும்படி மீண்டும் மீண்டும் கட்டளையிட்டுக் கொண்டிருந்தாள்.

'இப்படி அழ உனக்கு வெட்கமாயில்ல?' என மாலதியக்கா கோபத்துடன் கேட்பாளென நான் நினைத்தாலும் அவள் அவ்வாறெதுவும் கூறவில்லை.

அதற்குப் பதிலாக அவள் எம்மருகே வந்து நின்று, என்னையே பார்த்துக் கொண்டிருப்பதை கண்ணீர்ப் படலத்தின் மத்தியில் நான் கண்டேன்.

"பரவாயில்ல. அவளை அழ விடு" என ஒருபோதும் கேட்டிராத மிருதுவான குரலில் அவள் செல்வமலரிடம் கூறினாள்.

"இப்படிப்பட்ட சந்தர்ப்பங்கள்ல பொம்பிளையளால இதைத்தானே செய்ய முடியும்"

அப்போதிலிருந்து சில தினங்கள் எவ்வாறு கடந்துசென்றன என உண்மையிலேயே எனக்கு நினைவில்லை. கனவுகளிடையே நான் அவரது கண்களிரண்டையும் மாத்திரம் கண்டேன். நெஞ்சு வெடிக்குமளவு துயரத்தோடு நான் வாடிக் கொண்டிருக்கையில் அக் கனவுகளினூடு அப்பா என்னருகே வந்து தலையைத் தடவி கண்ணீர் உகுப்பதையும் கண்டேன். கடவுளே, என் அப்பா அருகிலிருந்தால்! அவர் மரணித்த நாளில் வரண்டு போன எனது கண்ணீர் மீண்டும் ஊற்றெடுத்திருந்தது.

சில தினங்களுக்குப் பிறகு கண்ணீர் வரண்டு போன பெண்ணொருத்தியாக எழுந்து நின்ற எனக்கு போர்க்களம் இலகுவானதாக மாறியது.

முன்னால் வேட்டுச் சத்தங்கள் கேட்கும்போது, அதற்கு ஒரு கணத்துக்குப் பிறகு என்னுடன் கதைத்தவாறு இந்த ஜீவிதத்தைப் பகிர்ந்து கொண்டிருந்த எனது சகாக்கள் மரித்து விழும்போது, அழுவதற்கு என்னிடம் கண்ணீர் மீதமிருக்கவில்லை. அறியாதவோர் போர்க்களத்தில் எனது சகோதரன் இறந்துவிட்ட தகவல் கேட்டும் அழுவதற்கு என்னிடம் கண்ணீர் இருக்கவில்லை. என்னை வீட்டுக்கு அழைத்துச் செல்லவென எனது அம்மா என்னைத் தேடி முகாமுக்கு வந்தபோது எனக்கு அவளைப் பார்த்து அழ கண்ணீர் ஊற்றெடுக்கவில்லை.

மென்மையான உள்ளத்தை நான் இழந்திருந்தேன். அவர் அதையும் எடுத்துக் கொண்டுதான் சென்றிருந்தார்.

அதை நான் மிகவும் தெளிவாக உணர்ந்தது, ஒருநாள் போர்க்களத்தில் செத்துப் போயிருந்த சிங்கள இராணுவப் படைச் சிப்பாயினது உயிரற்ற உடலைக் கண்டபோதுதான். நான் உடனடியாக நின்று அதைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அந்தச் சிப்பாயின் முகம் எனது உடன்பிறவா சகோதரனொருவனை நினைவுபடுத்தியது. அவனும் நானும் சிறுவயதில் ஒன்றாக விளையாடப் பழகியிருந்தோம். நான் எனது எதிரியையே பார்த்துக் கொண்டிருந்தேன். இதயத்தின் ஆழத்தில் கடுமையான வலியொன்று தோன்றத் தொடங்கியது. நான் போர்க்களத்தில் மரித்துப் போன எனது சகாக்களின் முகங்கள் பற்றிய ஞாபகங்களால் அவ் வலியை மூடி மறைத்தேன்.

ஆயுதங்களை ஏந்தியவாறு காடு கரைகளைத் தாண்டிச் செல்லும்போது எனக்கு எனது காதலன் நினைவுக்கு வரும் கணங்களும் இல்லாமலில்லை. மஞ்சள் நிற காட்டுப் பூக்களை மிதித்தவாறு போகும்போது ஒருநாள் அவர் எனக்கு எழுதியிருந்த கவிதை நினைவுக்கு வந்தது. என் மீது உதித்த காதல், இதயப் புல்வெளியில் பூத்திருக்கும் எழில்மிகு வனச் சோலையென அவர் எழுதியிருந்தார். எனது பூட்ஸ் சப்பாத்துக்களுக்கு அப்பூக்கள் மிதிபட்டுக் கசங்குகையில் நான் அவ்வார்த்தைகளை மறக்க முயற்சித்துக் கொண்டிருந்தேன்.

எனினும், நடுக்காட்டில் குளிரில், மழையில் நனைந்தவாறு, தூரத்தே வெடியோசையை செவிமடுத்தவாறு, நுளம்புகளை அடித்தவாறு கழிந்த இரவு நேரங்களில் அவர் முடிவேயற்று எனது நினைவுக்கு வந்த சந்தர்ப்பங்களும் இருந்தன.

அவ்வாறான ஓர்நாளில் நான் குருதி வடியும் இதயத்தோடிருந்தேன். அவர் தொலைதூர தேசமொன்றில் காதலியொருத்தியோடு வாழ்ந்து வருவதாக அங்கிருந்து வந்த நலன்விரும்பியொருவர் மூலமாக அறியக் கிடைத்தது. அக் கணத்தில் அவரது சூடான, மிருதுவான படுக்கையில், அவளை அணைத்தவாறு அவர் படுத்திருக்கும் விதம் எனக்குத் தோன்றியது. அவர் அவளை முத்தமிடும் விதத்தை நான் ஆர்ப்பரிக்கும் மனதோடு பார்த்துக் கொண்டிருந்தேன். ஒருநாள், அவரது உதடுகள் எனது கன்னங்களில் பதிந்திருந்தது நினைவு வந்தது. இப்போது அவர் வேறொருத்தியோடு படுத்துக் கொண்டிருக்கக் கூடுமென எண்ணுவதே என்னை அடர்ந்த தீக்குள் வைத்து எரிக்கும் எண்ணமாக இருந்தது.

எனினும், அக் கணத்தில் நான் எங்கிருந்தேன்?

நான் நடுக்காட்டின் மத்தியில், அடைமழையில், குளிரில், வாழும் ஆசையைக் கை விட்டிருந்தேன். துப்பாக்கி ரவையொன்று வந்து எனது இதயத்தைத் துளைத்து நான் செத்துப் போய்விடும் ஆபத்திலிருந்தேன்.

அவர் அவரது காதலியோடு - சிலவேளை பொம்மையைப் போல

அழகான, மென்மையான ஒருத்தியாக இருக்கக் கூடுமான காதலியோடு - மிருதுவான போர்வை விரிக்கப்பட்ட படுக்கையில் காதல் சுகத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும் அக்கணத்தில், பாடுபடுவதாலேயே கரடுமுரடாகிப் போன கைகால்களோடு, முரட்டுத்தரையில் தவழ்ந்து கொண்டு நானிருந்தேன். எவ்வளவு அநீதமானது இது?

எனக்கு சுய பச்சாதாபமும் கவலையும் தோன்றியது. எம்மைப் போன்ற பெண்களுக்கு இறுதியில் அனுபவிக்க நேரும் துயரம் இதுதானா?

வேறு பெண்ணோடு படுக்கும் அவருக்கு ஒரு கணத்துக்கேனும் நான் நினைவில் தோன்றமாட்டேனா என எனக்குத் தோன்றியது. இல்லை. அவ்வாறு நடக்கச் சாத்தியமில்லை.

“மனசில் ஒருத்தி இருக்கும்போதே அவளை மனசின் ஒரு மூலைக்குத் தள்ளிவிட்டு, இன்னொருத்தியோடு படுக்க ஆம்பிளையளால முடியும். நமக்குத்தான் மனசில ஒருத்தன் இருக்கும்போது, வேறொருத்தன் கை படுவதைக்கூடத் தாங்கிக்கொள்ள முடியாது” என செல்வமலர் ஒருநாள் என்னிடம் கூறினாள்.



அழகான, வசீகரமான முகத் தோற்றத்தைக் கொண்ட செல்வமலருக்கு செழிப்பான உதடுகள். அவளது கூந்தலை இறுக்கமாகப் பின்னி, உச்சியில் வைத்துக் கட்டியதும் அவளது கூர்மையான விழிகள் நீண்டு, மேலும் அழகு வெளிப்படும். முகத்தைப் பார்த்ததுமே ஏனையவற்றை விடவும் அவளது கண்களே அதிகம் வசீகரிக்கும். சீருடையைக் களைந்து விட்டு சாதாரண ஆடையில் அடர்ந்த கூந்தலை அவிழ்த்து விட்டிருக்கும்போது அவளது அழகு மேலும் அதிகரித்தது. அப்போது, இயக்கத்தில் இணைவதற்கு முன்பு அவள் எந்தவொரு இளைஞனையும் ஈர்க்கக் கூடிய அழகியொருத்தியாக இருந்திருப்பாள் என்பதில் சந்தேகமில்லை எனத் தோன்றும். வறிய பெண்ணாக இருந்த அவள் பாடசாலைக்குப் போகும் காலத்தில் நடுத்தரக் குடும்பத்து இளைஞன் ஒருவனைக் காதலித்திருந்தாள். எனினும், அக் காதலன் அவளைக் கைவிட்டு விட்டு வேறொருத்தியைத் திருமணம் செய்திருந்தான்.

“கடைசியா அவனைச் சந்திச்ச நாளில்கூட, என்னைத் தவிர வேறொருத்தியைத் திரும்பிப் பார்க்கக்கூடத் தோன்றுதில்லையென்று என்னட்ட சொன்னவன்” என செல்வமலர் ஒருநாள் தாழ்ந்த குரலில் என்னிடம் அந்தக் கதையைக் கூறத் தொடங்கினாள்.

“ஆனா ரெண்டு மாசம் போகேல்ல. அவன், அம்மா அப்பா சொன்ன பெட்டையைக் கல்யாணம் கட்டிக்கொண்டு நாட்டை விட்டே போயிட்டான். இப்ப பிள்ளையளும் இருக்கும்“ எனக் கூறி பெருமூச்சு விட்டவள் தொடர்ந்தாள்.

“அவனோட கல்யாண நாள்ல நான் விடியும்வரைக்கும் முழிச்சுக் கிடந்து அழுது தீர்த்தேன். அவன் இன்னொருத்தியோடு எப்படித் தேனிலவைக் கொண்டாடுவானெண்டு என்னால நினைச்சுகூடப் பார்க்க முடியல. நம்மால முடியேல்லை எண்டாலும் அவங்களால முடியுமடி” என்று கவலை நிறைந்த தொனியில் கூறியவாறே கண்ணீர் வடித்தாள்.

அக்காலத்தில் இயக்கத்திலிருந்த கம்பீரமான இளைஞனொருவனின் பார்வையும் அவள் மீது படிந்து கொண்டிருப்பதை நான் அறிந்திருந்தேன். எனினும், எனது சிநேகிதிக்கு அதைக் குறித்து எந்த ஈடுபாடும் இருக்கவில்லை.

“வேறொருத்தனைக் காதலிக்க முடியாதப்பா.. ஒருக்காலும் முடியாது. அவன் போனதுக்குப் பிறகு மனசு அப்படியே கல்லாகிப் போச்சுது. இயக்கத்தில சேரும்போது நான் ஒரு பறவையைப் போல சுதந்திரமா இருந்தவள். காதல் எண்டால் அது ஒரு பெரிய துயரம். அதிலேருந்து விடுதலையான பிறகுதான் அதுவரைக்கும் அனுபவிச்சுக் கொண்டிருந்தது மிகப் பெரிய துயரத்தை என்பது விளங்கிச்சுது. கொஞ்சம் யோசிச்சுப் பார். சிலவேளை நான் அவனுடன் போயிருந்தா இண்டைக்கு ஒரு யந்திரத்தைப் போல பிள்ளை பெத்துப் போட்டுக் கொண்டு இருந்திருப்பன். இப்ப நான் எவ்வளவு சுதந்திரமா இருக்குறன்? இப்படியே இருந்துட்டு இண்டைக்கு, நாளைக்கே செத்துப் போயிட்டாக் கூடப் பரவா யில்லை” எனக் கூறிய செல்வமலர் கலகலவெனச் சிரித்தாள்.

எனினும், என்னால் அவளளவுக்கு இயல்பாக அவரைப் பற்றிச் சிந்தித்துப் பார்க்க முடியவில்லை.

மேலும் மேலும் அதைப் பற்றி யோசிக்கும்போது எனது உடலினுள்ளே தோன்றும் கடுமையான வலி மூளை வரைக்கும் விரவிச் சென்று என்னைத் துன்புறுத்தத் தொடங்கியது.

நானறிந்திராத அப் பெண்ணைக் குறித்த பொறாமை யில் எரிந்து கொண்டிருந்தேன். கடவுளே, இவ்வுலகம் இருக்கும் வரைக்கும் வேறெந்தப் பெண்ணுக் கும் இப்படியொரு துயரம் வரக் கூடாது.

அன்று நான் கண்ட அவரது பார்வை எனது நினைவுக்கு வந்தது. அவரது பார்வையிலிருந்த என்னை நம்ப இயலாத தன்மையை உணர்ந்தேன். அவரை அவ்வாறு மனசாட்சியே இல்லாமல் துரத்தியடித்ததும் நானேதானே?

எனினும், அதில் நான் செய்த குற்றமென்ன? அவர் பக்குவப்பட்ட ஆண் மகனொருவனைப் போலல்லாது சிறுபிள்ளை

போலத்தானே நடந்துகொண்டார். அவர் சற்று பொறுமையாகக் காத்திருந்திருக்க வேண்டும், இல்லையா?

நானும்கூட, இவையனைத்தையும் கை விட்டுவிட்டு அவருடன் ஓடிப் போய், நல்லதொரு குடும்பத் தலைவியாக பிள்ளை பெற்றெடுத்து, வீட்டு வேலைகளைச் செய்துகொண்டு வாழ்ந்திருக்கலாம். எனினும், இறுதியில் எவ்வளவு தைரியமான பெண்ணும், குடும்பத் தலைவியாக மாறுவதால் நிகழ்வது ஒன்றேதானே? நான் எதிர்பார்த்த வாழ்க்கை அதுவா?

இல்லை. சிறு வயது முதலே எனக்கு அவ்வாறானதொரு பெண்ணாக இருக்க வேண்டிய அவசியம் இருக்கவில்லை. நான் புத்தகங்களில் வாசித்திருந்த சுதந்திரமான பெண்களைப் போல வாழ கனவு கண்டு கொண்டிருந்தவள். காலையிலிருந்து இரவு வரைக்கும் சமையலறையில் வெந்து கொண்டு உணவு சமைப்பதுவும், இரவில் கணவனின் உடற்தேவைகளைப் பூர்த்திசெய்து கொடுப்பதுவும்தான் வாழ்க்கை என ஏற்றுக்கொண்ட பெண் ஜீவிதத்தை நான் வெறுத்தேன். தலைக்கு மேலால் நீல ஆகாயத்தில் சஞ்சரிக்கும் பட்சிகளைப் பார்த்தவாறு அவை போல சுதந்திரமாகப் பறக்க விரும்பினேன். சிறு வயதிலிருந்து எனது கனவாக இருந்தது விடுதலைதான். நான் அதைத் தேடியவாறு, அதை வென்றெடுக்கப் போராடியவாறு கிடந்தவள். வளர்ந்தவளாகும்போது விடுதலை என்பதற்கான தெளிவான அர்த்தம் எனக்குக் கிடைத்தது. அதற்காக எனது முதல் காதலைக் கூடத் தியாகம் செய்தேன். மனம் துயரத்தால் கனத்திருந்த போதும் என்னால் அத் தியாகத்தைச் செய்ய முடிந்தது. எவருக்கும் நான் செய்தது தவறெனக் கூறலாம். அதற்குப் பரவாயில்லை. இன்றும் கூட என்னால் அத்தீர்மானம் குறித்து வாதிட முடியும்.

எப்போதாவது ஓய்வு கிடைக்கும் நாளின் இரவில், எனது தலைக்கு மேலால் விரிந்திருக்கும் ஆகாயத்தைப் பார்த்திருப்பது எனக்குப் பிடித்தமானது. நானொரு சிற்றெறும்பாக என்னை உணரும் அக்கணத்தை நான் விரும்பினேன். கருத்த ஆகாயத்தில் நட்சத்திரக் கூட்டம் தோன்றும்போது அதில் அருந்ததி நட்சத்திரம் எங்கேயிருக்கிறதெனத் தேடுவதை விருப்பத்தோடு செய்தேன். பெருங்கரடிக் கூட்டத்தைச் சேர்ந்த மங்கலான வெளிச்சத்துடன் கூடிய அருந்ததி நட்சத்திரத்தைத் தேடிக் கண்டுபிடிப்பது சிரமமானது. எனினும், நாங்கள் சந்தித்துக் கொண்ட ஓரிரவில் அவருக்கு அதைச் சுட்டிக் காட்டியது நான்தான். அவர் அதைப் பார்த்துக் கொண்டிருந்தபோது அவரது தோள் மீது தலை சாய்த்து ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அவரது ஸ்பரிசத்தால் பூரித்திருந்த மேனியோடும், மனதோடும் இருளின் மத்தியில் ஆயிரக் கணக்கான நட்சத்திரங்கள் பூத்திருப்பதாகத் தென்பட்டது. அன்று, தாலி கட்டப்படாமலேயே நான் அவரது மனைவியாகி யிருந்தேன். அவ்வேளையில், அக் கணத்தில் உறைந்திருந்து எப்போதுமே அவருடையவளாக வேண்டுமென, எனது சிறுபிள்ளைத்தனமான மனதுக்கு எவ்வளவு தேவையாக இருந்தது!

நாங்கள் ஒன்றாகக் கழித்த அவ்வாறான காதல் கணங்கள் பற்றிய ஞாபகங்களைப் பூட்டி வைத்திருக்கும் சங்கிலியைச் சற்று இலேசாக்கியதும் அவை உடனடியாக வெளியே குதித்து எனது மனதை குழப்பத்தால் மூழ்கடித்தன.

ஒருவிதத்தில் காதலின் சுகத்தையே வாழ்க்கையில் ஒருபோதும் அனுபவிக்காது மரித்துவிட நியமிக்கப்பட்டிருந்த எனக்கு, அப்பாக்கியத்தை அளித்தது அவர்தான். அதைப் பற்றி யோசித்துப் பார்க்கும்போது இப்போது மரித்துப் போகக்கூட எனக்குப் பயமில்லை. நான் செத்துப் போவது, சொற்ப காலமேனும் ஆணொருவனின் பரிபூரணமான காதலை அனுபவித்த பரிபூரணமான பெண்ணொருத்தியாகத்தான்.

துப்பாக்கியை நெஞ்சோடு அணைத்துக்கொண்ட நான் மேலே, இருண்ட ஆகாயத்தின் நட்சத்திரங்களிடையே சஞ்சரித்தேன். இவ்வுலகத்தை விட்டுச் செல்லும் நாளில் எல்லையற்ற வானத்தில் இணைந்து மேலுமொரு அருந்ததி நட்சத்திரமாக நானிருக்கக் கூடும்.

அவர் இந்த உலகத்தில் எவ்விடத்திலோ இருந்து என்னைப் பார்த்துக் கொண்டிருக்கக் கூடும்.

எனது காதலின் தூய்மையை அவர் முழுமையாகப் புரிந்துகொள்வது அன்றுதான்.

எம். ரிஷான் ஷெரீப் <mrishan-sha@gmail.com>

---

கத்யானா அமரசிங்ஹ, இலங்கையைச் சேர்ந்த பெண் ஊடகவியலாளரும் சமூக செயற்பாட்டாளரும் ஆவார். அறிவியல் கட்டுரையாளராக பத்திரிகைத் துறையில் பிரவேசித்த கத்யானா, சிறப்புக் கட்டுரையாசிரியராகவும் பிரதி எழுத்தராகவும் பிரதி ஆசிரியராகவும் பல்வேறு ஊடகங்களில் இரண்டு தசாப்தங்கள் பணியாற்றிய அனுபவங்களைக் கொண்டவர். இருபதுக்கும் மேற்பட்ட மொழிபெயர்ப்பு நூல்களை வெளியிட்டிருக்கும் இவரது முதல் நாவல் 'நிலிவெஸ்ஸ' 2014ஆம் ஆண்டு வெளிவந்தது. இரண்டாவது நாவலான 'வண்ணதாசி' 2017ஆம் ஆண்டுக்கான இலங்கை நூல் பதிப்பாளர்களின் ஏற்பாட்டில் வழங்கப்படும் சுவர்ண புஸ்தக விருதுக்கான இறுதிச் சுற்றுக்குத் தேர்வானதோடு ஒரு லட்சம் ரூபாய் பரிசினையும் வென்றது.

தற்போது சுயாதீன ஊடகவியலாளராகக் கடமையாற்றி வரும் இவரது மூன்றாவது நாவல் 'தரணி' ஆகும். இந்நாவலும்கூட 2019ஆம் ஆண்டு வழங்கப்பட்ட சுவர்ண புஸ்தக விருதுக்கான இறுதிச் சுற்றுக்குத் தேர்வாகி ஒரு லட்சம் ரூபாய் பரிசினை வென்றமை குறிப்பிடத்தக்கது. 'நட்சத்திரப் போராளி' எனும் இச் சிறுகதை, 'தரணி' நாவலில் ஒரு அத்தியாயத்தில் இடம்பெறும் சிறுகதையாகும்.

**சென்ற இதழில் மூன்றாம் பக்கம் உள்ளடக்கத்தில் 'மகரிஷி நினைவுகள்' என்பது 'மகிரிஷி நினைவுகள்' என இடம்பெற்றுவிட்டது. தவறுக்கு வருந்துகிறோம்.**

# டி. கண்ணன் கவிதைகள்



1

அந்தி
வேறொரு பலகணியிலிருந்து
புறப்பட்ட கானம் ஒன்று
பண்பட்ட யோகியின்
மனதில் அமைதி
நுழைவது போல்
என் பால்கனி நுழைகிறது
அறையின் பொருட்களை இரைத்துப் போடுகிறது
அசந்துவிட்ட என்னை உசுப்பி எழுப்புகிறது
இதையே ஒரு தொழிலாய்..

2. ராமமூர்த்தி சி.ஏ

அவன் ஒரு அந்தண
சிறு (வயது) வாலிபன்
இன்னமும் திருடத் தொடங்கவில்லை
மாட்டிக் கொள்ளாமல்
திருடுவதற்கான விடயங்கள்
அவனுக்கு போதிக்கப்படுகிறது
கசக்கவில்லை நெய்
அதிகாலை புறப்படும் முன்
அந்தத் தெருவில்
குதிரைகள் லாந்திக் கொண்டிருக்கின்றன
மாடுகளின் தாறுமாறான நடையசை..
அவனைத் துரத்திக் கொண்டிருக்கிறார்கள்
தப்பிக்க
குறுக்குச் சந்துகள் இல்லாத அக்ரஹாரம்
தப்பிப்பதற்கு
குறுக்கு சந்துகளை விடவும்
நேர் பாதை சாலச் சிறந்தது
என்பது ஆரம்ப பாடம்
தப்பித்து விட்டான்

3.

ஒற்றை மனநிலையோடு என்றும் படுத்ததில்லை
பழுதிலா என் சாயல்கள்
ஆங்காங்கே சிதறிக் கிடக்கின்றன
அவற்றுள் சிலவை பயந்தவை
தோப்பில்
ஆற்றில்
விளையாட்டு மைதானத்தில்
மதுபான விடுதியில்
நீவீர் படிக்கும் (?) புத்தகங்களில்
யாரோ ஒருத்தியின் படுக்கையறையில்
இன்னும்..
இரவுக்கென அவைகளை
விரட்டி
வீட்டிற்கு திரட்டிக் கொண்டிருக்கிறேன்
கதம்பக் கனவுகள்தான்
எவ்வளவு விநோதமானவை ●

**"டி. கண்ணன்"** <krishnaswamy164@gmail.com>

# கருணை உணர்வில் இருந்தே நகைச்சுவை பிறந்திருக்க வேண்டும்!



சார்லி சாப்ளின்
தமிழில்: ராம் முரளி

உலகம் முழுக்க நகைச்சுவை கலைஞர்களுக்கு ஆதர்சமாகத் திகழ்பவர் சார்லி சாப்ளின். கேளிக்கை உணர்வின் பொதுவான பிம்பமாக அவரது நாடோடித் தோற்றமே நிலை பெற்றிருக்கிறது. பசி, வறுமை, கையறுப்பட்ட நிலை, அனாதைத் தோற்றம், சமூக உதிரி என விளிம்பு நிலை மனிதர்களின் பிரதிநிதியாகத் திகழும் சாப்ளின், அந்நிலையில் இருந்து மீளச் செய்யும் முயற்சிகளில் நேரும் சிக்கல்களை, பெரும் பெரும் நகைச்சுவை கதைகளாக உருவாக்கியவர். கேளிக்கையுணர்வே மையம் என்றாலும், அதனைக் கடந்த ஆழமான மனித நேயத்தைத் தொடர்ச்சியாக சாப்ளின் திரைப்படங்கள் பேசி இருக்கின்றன. காலங்களைக் கடந்தும் உலக சினிமாவின் தலைசிறந்த உருவாக்கமாக சார்லி சாப்ளினின் கதாபாத்திரம் இருக்கிறது. 1966ஆம் ஆண்டில் தனது திரைப்படங்கள் பற்றியும், நாடோடி தோற்றத்தின் உருவாக்கம் குறித்தும் திரைப்பட ஆர்வலர் ரிச்சர்ட் மேரிமேனுக்கு சாப்ளின் அளித்த நேர்காணலின் தமிழாக்கம் இது.

**இந்த நேர்காணல் முற்றிலுமாக உங்களது கலை பற்றியும், பணி பற்றியும் மட்டுமே கவனத்தில் எடுத்துக்கொள்கிறது. நீங்கள் எவ்விதமாக வேலை செய்கிறீர்கள் என்பதைப் புரிந்துகொள்ள விரும்புகிறேன்.**

என்னைப் பற்றிய ஒரு முழுமையான சித்திரம் என்பது எனது வேலைகளில் நான் முழு ஈடுபாட்டுடன் இயங்குகிறேன் என்பதுதான். நான் செய்துகொண்டிருக்கும் அனைத்தையும் முழுமையான அர்ப்பணிப்புடன்தான் செய்கிறேன். வேறு ஏதாவதொன்றை என்னால் இதைவிடவும் அதிகப்படியான அக்கறையுடன் நெருங்கிச் செல்ல முடியும் என்றால், நான் அதனை செய்திருப்பேன். ஆனால், என்னால் அப்படி சிந்திக்கக்கூட முடியவில்லை.

**உங்களது நகைப்புக்குரிய நாடோடி தோற்றம் உருவான கணத்தை பகிர்ந்துகொள்ள முடியுமா?**

இது மிக அவசரமான ஒரு மனநிலையில் உருவாகி வந்ததுதான். ஒளிப்பதிவாளர் உடனடியாக ஏதாவது ஒரு ஒப்பனையை போட்டுக்கொள்ளும்படி என்னிடம் தெரிவித்தபோது, எனது மனதில் சிறிதளவுகூட இந்த தோற்றம் குறித்த சித்திரம் உருவாகி இருக்கவில்லை. உடைகள் மாற்றும் அறைக்கு வேகவேகமாக செல்லும்போது ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத வகையில் எனது உடைகளைத் தேர்வு செய்ய வேண்டும் என்று மட்டும் நினைத்துக்கொண்டேன். தொளதொள கால்சட்டை, இறுக்கமான மேல் சட்டை, பெரிய தலை, அதற்கு சற்றும் பொருந்தாத சிறிய தொப்பி என மனதில் இந்த தோற்றம் சிறிய அளவில் உருவாகிக் கொண்டிருந்தது. தொப்பி ஒரே சமயத்தில் நகைப்புக்குரியதாகவும் மேட்டிமைத்தனத்துடனும் இருக்க வேண்டும் என நினைத்தேன்.

எனது முக அலங்காரம் எப்படி அமையப் போகிறது என்று அப்போது முடிவு செய்திருக்கவில்லை. துயரத்தில் ஆழ்ந்த நிலையில், மிகக் கடுமையாக எனது முகம் இருக்க வேண்டும் என்று மட்டும் தெரியும். எனது முகத்தில் படர்ந்துள்ள நகைச்சுவை உணர்வை மறைப்பதற்காக சிறிய அளவிலான மீசையைப் பயன்படுத்தினேன். மீசையின் பயன்பாட்டிற்கு வேறு எந்தவொரு குறிப்பிட்ட அர்த்தமும் இல்லை. ஆனால், முரணாக அந்த மீசை எனது முகத்தை மேலும் வேடிக்கை மிக்கதாகக் காண்பித்துவிட்டது.

**உங்களது இந்த நாடோடியின் தோற்றத்தை முதன்முறையாக பார்த்தபோது உங்களது உணர்வு எப்படி இருந்தது?**

கேமிராவின் முன்னால் முதன்முறையாக இந்த தோற்றத்தில் நிற்கும்வரையில், பெரியளவில் எந்தவொரு சலனத்தையும் இந்த தோற்றம் ஏற்படுத்தப்போவதில்லை என்றே நினைத்திருந்தேன். எனினும், நான் ஏற்றிருந்த பாத்திரத்திற்கு இது போதுமானது என்கின்ற எண்ணம் என்னிடத்தில் இருந்தது. முழு ஒப்பனையுடன் மெல்ல படப்பிடிப்பு தளத்தை நெருங்கிச் செல்லும்போது பொருத்தமான ஆடையை அணிந்திருக்கிறோம் என்று உணர்ந்தேன். அதோடு, அந்த



கதாபாத்திரத்திற்குரிய நடத்தை எனது உடல்மொழியில் தன்னியல்பாக உருவாகியிருந்தது.

'Mabel's Strange Predicament' என்ற அந்த திரைப்படத்தில், எனது காட்சி ஒரு உணவகத்தின் வரவேற்பு அறையில் நிகழ்வதாக இருந்தது. அந்த நாடோடி அவர்களது விருந்தினரைப்போல அங்கு பாவனை செய்கிறான். இதனால், தன்மையான உபசரிப்பும் சிறிது நேரம் ஓய்வெடுக்க ஒரு வசதியான இருக்கையும் கிடைக்கும் என எதிர்பார்க்கிறான். அங்கிருக்கும் அனைவரும் அவனை முதலில் விநோதமாக பார்க்கிறார்கள். அவனும் சளைக்காமல் விருந்தினரைப் போலவே பலவிதமான செய்கைகளை செய்து கொண்டிருக்கிறான். பதிவேட்டை பார்வையிடுவது, சிகரெட் பற்ற வைப்பது, சுற்றி நடந்து கொண்டிருப்பவர்களை மேட்டிமைத்தனத்தோடு பார்வையால் தொடுவது என அவனது செய்கைகள் இருக்கிறது. அதோடு அப்போது புகையிலை சாம்பலை தாங்கி நிற்கும் கிண்ணத்தின் மீது லேசாக தடுமாறி விழவும் செய்தேன். இந்த தோற்றத்தில் அதுதான் நான் செய்த முதல் வேடிக்கை நிகழ்வு.

அந்த தருணத்திலேயே அந்த கதாபாத்திரம் பிறப்பெடுத்திருந்தது. இது சிறப்பானதொரு கதாபாத்திரம் என்று மட்டும் நினைத்திருந்தேன். தொடர்ச்சியாக இதே தோற்றத்தில் திரைப்படங்களில் நடிப்பேன் என அப்போது கருதவில்லை.

எனது உடைகளையும் ஒப்பனையையும் பற்றி அதிகம் சிந்திடாத நான், அந்த தோற்றத்தின் ஒரு அங்கமாக இருந்த காயம்பட்ட கால் பாதத்தை மட்டும் தக்கவைத்துக் கொள்வதென்று முடிவுடன் இருந்தேன். அவன் எவ்வளவு உற்சாகமான மனநிலையில் இருந்தாலும், அல்லது பரபரப்புடன் இயங்கிக் கொண்டிருந்தாலும், அவனது கால் பாதம் எப்போதும் அசௌகர்யமூட்டும் விதத்தில்தான் இருக்க வேண்டும். உடைகளை நிர்வகிக்கும் பிரிவினரிடம் எனக்கு இரண்டு பெரிய பழமையான ஷூக்கள் வேண்டும் என சொன்னேன். ஏனெனில், எனது கால் பாதங்கள் மிக மிக சிறியவை. அதனால், இந்த பெரிய காலணிகளை அணியும்போது இயல்பாகவே ஒருவித கேளிக்கை உணர்வு உருவாகிவிடுகிறது. நான் நயமிக்கவன். ஆனால், பெரிய காலணிகளுடன் குழைவாகவும் வசீகரமாகவும் என்னை காண்பித்துக்கொள்ள முயற்சிக்கையில் அது உண்மையிலேயே வேடிக்கையானது.

**நாடோடி தோற்றத்திற்கு இன்றைய காலத்தில் மதிப்பு இருப்பதாக கருதுகிறீர்களா?**

அதுபோன்ற மனிதருக்கு இக்காலத்தில் இடமில்லை என்றே கருதுகிறேன். உலகம் இப்போது சற்றே கூடுதல் ஒழுங்குடன் இயங்குகிறது. எந்த வகையிலும் உலகம் இப்போது மகிழ்ச்சியுடன் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. நான் சில சிறுவர்களைப் பார்க்கிறேன். குட்டை உடையுடனும் நீண்ட தலைகேசத்துடனும் உலவும் அவர்களில் சிலர் ஒரு நாடோடியைப் போல தங்களை மாற்றிக்கொள்வதில் விருப்பமுள்ளவர்களாக இருக்கலாம். ஆனால், அவர்களிடத்தில் பணிவு இல்லை. அவர்களுக்குப் பணிந்து செல்வதன் அர்த்தமே புரிந்திருக்காது என்று நினைக்கிறேன். அதனால்,



The Rink

இயல்பாகவே அந்த தோற்றம் ஒரு பழமைவாதத்தை எய்திவிடுகிறது.

சாப்ளினது உருவம் இப்போது முன் காலத்தை சேர்ந்ததாகிறது. அதனால்தான், என்னால் இப்போது முன்புபோல இயங்க முடியவில்லை. அதோடு மற்றுமொரு காரணம் - திரைப்படங்களில் சேர்க்கப்படும் ஒலி. உரையாடல் திரைப்படங்களில் நுழைந்தபோது, எனது கதாபாத்திரம் தொலைந்துவிட்டது. அவனுக்குக் குரல் எப்படி இருக்கும் என்பதை என்னால் கற்பனைகூட செய்து பார்க்க முடியவில்லை. அதனால், காலத்தில் அவன் தொலைந்து போவதுதான் நியாயமானது.

**உங்களது நாடோடி தோற்றத்தின் சிறப்பு அம்சமாக எதனைக் கருதுகிறீர்கள்?**

அவனது பணிவும் ஏழ்மையும்தான். அதைத்தான் இந்த கதாபாத்திர உருவாக்கத்தின் முக்கியமான விஷயமாக நான் பார்க்கிறேன். இது எனக்கு பெரும் மகிழ்வை கொடுக்கிறது. அவன் அனைத்தையும் மென்மையாகவும் அதே சமயத்தில் துடிப்புடன் அணுகுகிறான். ஆனால், ஒருபோதும் இந்த நாடோடி கதாபாத்திரம் பிறரால் விரும்பப்பட வேண்டும் என நான் நினைத்ததில்லை. இது என்னுள்ளாக நிகழுகின்ற என்னை வெளிப்படுத்திக்கொள்ள நான் தேர்வு செய்திருக்கின்ற பாணி.

பார்வையாளர்களின் ஆராவாரம் என்னை உற்சாகப்படுத்துகிறது என்பது உண்மைதான் என்றாலும், பார்வையாளர்களிடம் எவ்வகையிலும் தொடர்பை ஏற்படுத்திக்கொள்வது இல்லை. பார்வையாளர்களின் உள் நுழைவு என்பது அந்த குறிப்பிட்ட நிகழ்வு முடிந்ததற்கு பின்பாகத்தான் வருகிறதே தவிர, உருவாக்கத்தின்போது அல்ல. எப்போதும் எனக்குள்ளாக உருவாகின்ற ஒருவித கேளிக்கை உணர்வால் உந்தப்பட்டுதான் என்னை வெளிப்படுத்திக்கொள்கிறேன். அவ்வுணர்வே எனது செய்கைகளையும் பாவனைகளையும் தீர்மானிக்கிறது. இது உண்மையிலேயே வேடிக்கையானது.

**ஒரு சிக்கலான சூழலை எப்படி உருவாக்குகிறீர்கள்? அது தன்னிச்சையாக வருவதா அல்லது அதற்கென ஏதேனும் வழிமுறைகள் இருக்கிறதா?**

இல்லை. அதற்கென்று எந்தவொரு வழிமுறையும் இல்லை. மிகச் சிறந்த பல யோசனைகள் நெருக்கடியான தருணத்தில்தான் உருவாகிறது. ஒரு நல்ல நகைச்சுவைக்கான யோசனை உங்களுக்குக் கிடைத்துவிட்டதென்றால், அது மெல்ல அடுத்தடுத்த செய்கைகளுக்குத் தானாக உங்களை வழி நடத்திச் செல்லும்.

'The Rink' திரைப்படத்தில் வரும் ஸ்கேட்டிங் காட்சியை உதாரணத்திற்கு எடுத்துக் கொள்வோம். ஒரு ஜோடி ஸ்கேட்டிங் ஷூக்களை காலில் அணிந்துகொண்டு பார்வையாளர்களுக்கு மத்தியில் இறங்கிவிட்டேன். எல்லோரும் நான் கீழே விழப்போவதாக நினைக்கிறார்கள். ஆனால், அவர்களது எதிர்பார்ப்புக்கு மாறாகத் தொடர்ந்து ஸ்கேட்டிங் செய்து, இறுதியில் நிதானமாக ஒற்றைக் காலில் சறுக்கு விளையாடி ஓய்கிறேன். ஒரு நாடோடியால் இதை செய்ய முடியும் என்பதை பார்வையாளர்கள் எதிர்பார்த்திருக்கவில்லை.

'Easy Street'இல் வரும் தெரு விளக்கு காட்சியை எடுத்துக்கொள்ளுங்கள். நான் காவல்துறையை சேர்ந்தவனாகவும் ஒரு வலிமையானவனை அடக்குவதாகவும் அமைந்த காட்சி தருணத்தில் உண்டாகிய நகைச்சுவை அது. ஒரு குறுந்தடியால் அந்த வலிமையானவனைத் தாக்குகிறேன். தொடர்ச்சியாக அடித்துக்கொண்டே இருக்கிறேன். ஆனால், எனது தாக்குதல் அவனில் எந்தவிதமான பதற்றத்தையோ தளர்வையோ உருவாக்கவில்லை. அதுவொரு கெட்ட கனவைப் போல இருக்கிறது. அவன் தனது சட்டையின் கைப் பகுதியை மடித்து விடுகிறான். அதன்பிறகு, என்னை மேலுயர்த்தி கீழே தூக்கி எறிகிறான். அவனது வலிமையை என்னால் உணர முடிகிறது. அவனால், அந்த தெரு விளக்கையே வளைத்து ஒடிக்க முடியும் என்று நினைக்கும் நான், அவனது முதுகின் மீது ஏறி அந்த விளக்கில் அவனது முகத்தைப் பொருத்திவிடுகிறேன். சிறிய சிறிய வேடிக்கையான செய்கைகளின் மூலமாக, இந்த காட்சியை பெரும் நகைச்சுவை மிக்கதாக நான் மாற்றி விட்டேன்.

ஆனால், பல வேதனை மிகுந்த தினங்களும் இருக்கத்தான் செய்கின்றன. எந்தவொரு யோசனையும் இல்லாமல் வேலையற்று இருந்த பல



Mabel's Strange Predicament

பெரும்பொழுதுகளும் இருக்கின்றன. என்னுடைய வேலை என்பது பிறரை சிரிக்க வைப்பதுதான் என்றாலும், வேடிக்கையான ஒரு தருணத்தை உருவாக்காமல், நகைச்சுவை உருவாகாது. நீங்கள் கோமாளியைப்போல வேடிக்கை செய்யலாம், முட்டாளைப்போல நடந்துகொள்ளலாம். ஆனால், நிச்சயமாக தருணங்களை உருவாக்குவது முக்கியமானது.

**நேரில் பார்க்கும் விஷயங்களை வைத்து இத்தகைய தருணங்களை உருவாக்குகிறீர்களா அல்லது இவை அனைத்தும் ஒட்டுமொத்தமாக உங்களது கற்பனையில் உருவாகி வருகிறதா?**

இல்லை. எங்களது உலகத்தை நாங்களாகவேதான் உருவாக்கி இருக்கிறோம். கலிஃபோர்னியாவில் உள்ள ஒரு ஸ்டூடியோவில்தான் எனது நகைச்சுவைகள் படமாக்கப்படுகின்றன. எனது பெரும் மகிழ்ச்சியான நேரம் என்பது ஸ்டூடியோவில் நான் அமர்ந்திருக்கும் நேரம்தான். பல்வேறு யோசனைகளை உருவாக்கி, அவற்றில் சிறந்தவை குறித்து மேலும் தீவிரமாக சிந்தித்து, பிறகு அதனை எனது குழுவினருடன் பகிர்ந்துகொள்ளும்போது உண்டாகும் சந்தோஷம்தான் எனக்கு மிக முக்கியமானது. எனக்கு ஒரு திருப்திகரமான உணர்வெழுச்சி உண்டானதும்தான், அனைத்தும் நிகழத் தொடங்குகின்றன. அதுதான் எனது சிந்தனைகளின் நிறுத்துமிடம். வேடிக்கையான ஒரு தருணத்தை உருவாக்கும் உணர்ச்சி மிக உன்னதமானது. யதார்த்தத்தில் நாம் பார்க்கும் உலகத்தில் இருந்து முற்றிலும் வேறான உலகம் அது. அதில் பெரும் கேளிக்கை நிரம்பியிருக்கும். நீங்கள் அங்கு அமர்ந்திருப்பீர்கள். அரை நாள் ஒத்திகைப் பார்ப்பீர்கள். அதன்பிறகு படப்பிடிப்பு நிகழும். அவ்வளவுதான்!

**யதார்த்தவாதமும் உங்களது நகைச்சுவையில் ஒருங்கிணைந்திருக்கிறது அல்லவா?**

ஆமாம். நிச்சயமாக. நம்பும்படியாக ஒரு நகைச்சுவையை எப்படி சொல்வது என்றுதான் நான் சிந்திக்கிறேன். உங்களிடம் அபத்தமான, குழப்பம் மிகுந்த தருணம் ஒன்று இருக்கிறது. அதனை கூடுமானவரையில் யதார்த்தமாக நெருங்கி அணுகுவேன். பார்வையாளர்களும் இதனை உணர்ந்திருப்பதால், அவர்களும் தங்களது முழுமையான ஈடுபாட்டை செலுத்துகிறார்கள். இது ஒரே சமயத்தில் யதார்த்த வயமானதாகவும், குழப்பம் மிக்கதாகவும் இருக்கிறது. இதுதான் பார்வையாளர்களுக்குக் கிளர்ச்சியூட்டுகிறது.

பகுதியளவில் உங்களது நகைச்சுவையில் கொடூரமான சில செய்கைகளும் இருக்கின்றன.

அத்தகைய கொடூரமான செயல்கள்தான் நகைச்சுவையின் அடிப்படையே! எதுவிவேகமானது என நாம் கருதுகிறோமோ அதுதான் உண்மையில் விவேகமற்றது. இந்த கருத்தை மனதில் உறைக்கும் விதத்தில் உங்களால் சொல்ல முடிந்தால் அதனைப் பார்வையாளர்கள் விரும்புவார்கள். வாழ்க்கையில் நிலவும் அபத்தங்களாக அவர்கள் அதனை உணருகிறார்கள். அத்தகைய தருணங்கள் உண்மையில் ஏற்படும்போது, அதனை நினைத்து துயருறாமல் அதனை நினைத்து தற்கொலை செய்துகொள்ளாமல், ஒரு அபத்த கணம் எனக் கருதி கடந்துவிடுகிறார்கள். கள்ளங் கபடமற்ற செய்கை என சொல்லப்படும் இந்த புதிரான வற்றின் மீது எழுப்பப்படும் கேள்வியே இது.

ஒரு முதியவர் வாழைப்பழத்தின் மீது கால் வைத்து, அதனால் மெதுவாகத் தடுமாறி கீழே விழும்போது நாம் சிரிப்பதில்லை. மாறாக, தன்னை மிக உயர்ந்தவனாகக் காண்பித்துக்கொள்ளும் சுய பெருமிதம் கொண்ட மனிதர் இடறி விழுகையில் நாம் சிரிக்கின்றோம். சகித்துக்கொள்ளவியலாதது என நாம் கருதும் அனைத்து தருணங்களும் வேடிக்கையானவைதான். அதனை நாம் எவ்விதமாகக் கையாளுகின்றோம் என்பதில்தான் அந்த வேடிக்கை உணர்வு இருக்கிறது. கோமாளிகள் அரங்கத்திற்குள் வரும்போது எவ்விதமான கீழ்மையான செய்கைகளையும் அவர்களிடத்தில் நாம் எதிர்பார்க்கலாம். ஆனால், பெருமிதம் மிளிரும் உடல்மொழியுடன் உணவகம் வரும் ஒரு புத்திசாலி வேடமிட்ட மனிதரின் காற்சட்டை அவர் அறிந்திராமல் கிழிந்திருக்கிறது என்றால், நிச்சயமாக அது மிக மிக வேடிக்கையானதுதான்.

**உங்களது நகைச்சுவை அனைத்தும் சம்பவங்களால்தான் கட்டமைக்கப்பட்டிருக்கிறது. அது அறிவுபூர்வமானது அல்ல.**

யதார்த்தத்தில் நிகழ்வது. ஆனால் மிகவும் வேடிக்கையானது.

நான் எப்போதுமே ஒன்றுக்கொன்று தொடர்புடைய சம்பவங்கள்தான் ஒரு கதையை உருவாக்குகிறது என்பதில் நம்பிக்கையுடன் இருக்கிறேன். பில்லியர்ட் (Billiard) மேசையில் பந்துகளை வைத்து விளையாடுவதைப்போல. ஒவ்வொரு பந்தும் அதில் தன்னளவில் முழுமையானது, ஒரு சம்பவத்தைப் போன்றது. ஒரு பந்து மற்றொரு பந்தைத் தொடும்போது ஒரு முக்கோணம் அந்த மேசையின் மீது உருவாகிறது. அந்த பிம்பத்தை உதாரணமாக வைத்துக்கொண்டுதான் எனது படைப்புகளை அணுகுகின்றேன்.

திரைப்படங்களில் உங்களது இயங்குதலில் அபாரமான ஒரு வேகம் இருக்கிறது. அதோடு, ஒன்றின் பின் ஒன்றாக சில வேடிக்கையான தருணங்களையும் சில கணங்களுக்கு அடுக்குகிறீர்கள். இதுதான் உங்களது பொதுவான குணம் என்று கருதுகிறீர்களா?

எனக்கு அது தெரியவில்லை. நான் வேறு சில நகைச்சுவை நடிகர்களைப் பார்த்திருக்கிறேன். அவர்களது வெளிப்பாட்டில் சில தளர்வுகள் இருப்பதை உணர்ந்திருக்கிறேன். நிதானமாக இயங்குவதை தவிர்த்துவிட்டு, மிக வேகமாக நான் இருக்கிறேன் என்பதை என்னாலும் உணர முடிகிறது. மெதுவாக செயல்படுவதற்கான நம்பிக்கை என்னிடத்தில் இல்லை. அதோடு, நான் செய்யும் செயல்களின் மீதும் எனக்கு முழு நம்பிக்கை இருப்பதில்லை. ஆனால், செயல் மட்டுமே முக்கியமானது அல்ல. அனைத்திலும் ஒரு வளர்ச்சி நிலை இருக்க வேண்டும். இல்லையெனில், அது யதார்த்தத்தில் இருந்து வழுவியதாகிவிடும்.

உங்களுக்கு ஒரு பிரச்சினை கிடைக்கிறது. பிறகு கூடுமானவரையில் அந்த பிரச்சினையைத் தீவிரப்படுத்துகிறீர்கள். நீங்கள் வலிந்து ஒரு பிரச்சினையைத் தீவிரப்படுத்துவதில் இருந்து தொடங்கமாட்டீர்கள். இப்போது இந்த இடத்தில் இருந்து எப்படி நகரப் போகிறோம் என்று உள்ளுக்குள் கேள்வி எழும். இந்த தருணத்தில் இயல்பாக அடுத்தது என்ன நிகழும்? ஏற்றுக்கொள்ளும் வகையிலும், மிக யதார்த்தமாகவும் யோசித்தால் அடுத்தடுத்து பிரச்சினைகள் ஒன்றன் பின் ஒன்றாக அடர்த்தியாகி, பின் மெல்ல ஒருவித கடினமான சூழல் உருவாகும். தர்க்கரீதியாக இவை இருந்தால் மட்டுமே அதியற்புதமான நகைச்சுவை உருவாவதற்கான சாத்தியம் இருக்கும். இல்லையெனில், நகைச்சுவையும் இதில் இருக்கிறது என்பதாக உங்களது செயல் அமைந்துவிடும்.

நீங்கள் மென்னுணர்வு குறித்து கவலைப்படுவீர்களா அல்லது கிளிஷே (Cliche) குறித்து கவலைப்படுகிறீர்களா?

வெளிப்பாட்டுக் கலை வடிவத்தில் இதுக் குறித்தெல்லாம் கவலைப்பட தேவையில்லை என்றே கருதுகிறேன். இதனையெல்லாம் நான் எளிதாக தவிர்த்துவிடுவேன். வாழ்க்கையே கிளிஷேக்களால் ஆனதுதான். அதனால், அதுகுறித்து பயம்கொள்ள தேவையில்லை. ஒவ்வொரு விழிப்பின்போதும் புதிதான குணவியல்புடன் நாம் பிறப்பதில்லை. நாம் எல்லோரும் ஒரு நாளைக்கு மூன்று வேளை உணவு மற்றும் காதலில் ஈடுபடுவது அல்லது காதலில் இருந்து வெளியேறுவது போன்ற செய்கைகளுடன்தான் வாழ்ந்து மரணிக்கிறோம். கிளிஷே இல்லாத காதல் கதைகளே இல்லை. ஆனால், அதனை எவ்வளவு சுவாரஸ்யமாக நம்மால் சொல்ல முடிகிறது என்பதில்தான் அதனது ஆயுள் அடங்கியிருக்கிறது.

'The Gold Rush' படப்பிடிப்பின்போது காலணியை உண்ணும் செயலை பல முறை செய்தீர்களா?

ஆமாம். இரண்டு தினங்களுக்கு அதே காட்சியை திருப்தியுறாமல் மீண்டும் மீண்டும் எடுத்துக் கொண்டிருந்தோம். அதோடு, அக்காட்சியில் நடித்த முதியவரான மார்க்ஸ்வெய்ன் கடைசி இரண்டு டேக்குகளின்போது மிகவும் தளர்ந்து போயிருந்தார். அந்த காலணிகள் அதிமதுரத்தால் செய்யப்பட்டவை. அவர் அதனை அதிகளவில் சாப்பிட்டுவிட்டார். அதனால், "இனியும் என்னால் அந்த காலணிகளை உட்கொள்ள முடியாது!" என்று சொல்லிவிட்டார். இந்த காட்சிக்கான மூலக்கரு டோனார் பார்ட்டியில் (81 நபர்களுடன் 1846ஆம் ஆண்டு கலிஃபோர்னியா விரைந்து கொண்டிருந்த ரயில், கடும் பனிப் பொழிவால் ஓரிடத்தில் சிக்கித் தவித்தது) இருந்து எனக்குக் கிடைத்தது. அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாக மனிதத்தன்மையை இழந்து மான் தோலை உண்ணும் நிலைக்கு உள்ளானார்கள். அவர்கள் மான் தோலால் செய்யப்பட்ட காலணிகளை உண்டார்களா என்று நான் மிரட்சியுற்றேன். எனினும், இதில் இயல்பாகவே ஒரு நகைச்சுவை இருப்பதாக எனக்குப்பட்டது.

இதனை ஒரு கதையில் விவரிப்பதற்கு உகந்த தருணத்தை உருவாக்க பெரும் நேரத்தை செலவிட்டு அயர்ச்சியில் உழன்று இருந்தபோதுதான், மிக எளிதான ஒரு தீர்வு எனக்கு கிடைத்தது: பசி. ஒரு தருணத்தைக் கையாளுவதற்கு தர்க்கரீதியாகவும் யதார்த்தத்திற்குப் பொருந்துவதாகவும் நிகழ சாத்தியமுள்ளதாகவும் ஒரு யோசனை கிடைத்துவிட்டது என்றால், அதன்பிறகு பல்வேறு யோசனைகள் உங்களுக்குத் தோன்றியபடியே இருக்கும். அந்த திரைப்படத்தில் நிகழ்ந்த மிகச் சிறந்த விஷயங்களில் ஒன்றாக இதனைக் கருதுகிறேன்.

சப்தம் தொடர்பாக உங்களுக்கு ஏதேனும் சந்தேகம் இருக்கிறதா?

நிச்சயமாக இருக்கிறது. எனக்கு அதில் அனுபவம் இருக்கிறது என்றாலும், ஒரு கல்வியாக அதனை நான் பயின்றதில்லை. மௌனத்திற்கும் சப்தத்திற்கும் இடையில் பெரிய அளவில் வேறுபாடு இருக்கிறது. ஆனால், எனது திறமையின் மீது எனக்கு நம்பிக்கை இருக்கிறது. வெகு இயல்பாகவே என்னுள் நடிப்புத் திறன் இருக்கிறது என்பதை நம்புகிறேன். சப்தத்தின் மூலமாக என்னை வெளிப்படுத்துவதை விடவும், செய்கைகளின் மூலமாக வெளிப்படுத்துவதே எனக்கு இலகுவானது என்பதும் எனக்குத் தெரியும். நான் ஒரு கலைஞன். அதனால் ஒலிச் சேர்க்கையில் பல விஷயங்கள் மறைந்துவிடுகின்றன


City Lights

என்பதைப் புரிந்து வைத்திருக்கிறேன். நல்ல குரல்வளமும் வார்த்தைகளை அழகாக வெளிப்படுத்தும் லாவகமும் பெற்றிருக்கும் எவரும் என்னை மறக்க செய்துவிட முடியும். இவை இரண்டும் பாதி வெற்றியை ஈட்டித் தந்துவிடும்.

**யதார்த்தத்தின் மற்றொரு பரிமாணமான சப்தத்தை பயன்படுத்துவது மௌன படம் உண்டாக்குகின்ற கற்பனையான அர்த்தப்படுத்தல்களை கலைத்துவிடும் என்று நினைக்கிறீர்களா?**

நிச்சயமாக. நான் எப்போதுமே சொல்லி வருவதைப்போல உணர்ச்சி வெளிப்பாடு என்பது கவிதைபூர்வமானது. அதோடு, சிறப்பாக உருவாக்கப்பட்டிருந்தால் எவரும் புரிந்துகொள்ளும் வகையில் ஒரு உலகளாவிய பண்பையும் அது பெற்றிருக்கிறது. ஆனால், உச்சரிக்கப்படும் வார்த்தை ஒரு வழவழப்பான நிலையிலேயே தேங்கிவிடுகிறது. குரல் அழகானதும், அர்த்தங்களை எளிதில் வெளிப்படுத்திவிடுவதும்தான் என்றாலும், எனது கலை அப்படி எளிதில் வெளிப்பட்டு, ஒரு நிலையில் தேங்கிவிடுவதில் எனக்கு விருப்பமில்லை. மாயையை மிக ஆழமாகத் தனது குரல்வளத்தின் மூலமாக உணர்த்திவிடும் சிலர் இருக்கிறார்கள். ஆனால், உடல் மொழியால் ஒன்றை வெளிப்படுத்துவது என்பது ஒரு பறவையின் பாடலைப்போல அத்தனை இயற்கையானது. கண்கள் வெளிப்படுத்தும் பாவங்களை வர்ணிக்க வார்த்தைகளே இல்லை. மனிதர்களால் மறைக்க முடியாத அசலான முக பாவனை, நுட்பமாக வெளிப்படுத்தப்படும் அதிருப்தி உணர்வு போன்றவை இனி இருக்க சாத்தியமில்லை. இதனையெல்லாம் மனதில் இருத்திக்கொண்டுதான் படங்களில் பேச ஆரம்பித்தேன்.

**உங்களுக்கு விருப்பமான திரைப்படம் எது?**

'City Lights' என்று நினைக்கிறேன். அது செறிவாகவும் நன்றாகவும் உருவாக்கப்பட்டிருந்தது. அசலான நகைச்சுவையும் அந்த திரைப்படத்தில் இருந்தது.

**அது வீரியமிகுந்த திரைப்படம். அந்த திரைப்படத்தில் எனக்கு மிகவும் பிடித்தது என்னவென்றால், எப்படி இன்பமும் துன்பமும் அருகருகே இருக்கிறது என்பதை அது விவரித்திருந்தது.**

அது என்னை எப்போதும் ஈர்த்தது இல்லை. அது நாம் எடுத்துக்கொள்ளும் கருப்பொருளைச் சார்ந்தது என்றே கருதுகிறேன். அதனை எப்போதும் உணர்ந்தே இருக்கிறேன். எனது இரண்டாவது இயல்பைப்போல, கூடுதலாகவோ குறைவாகவோ அவ்வெண்ணம் என்னுள் இருக்கிறது. ஒருவேளை அது நான் வாழும் சூழலினால் உண்டானதாகவும் இருக்கலாம். சக மனிதரின் மீது கரிசனமும் அனுதாபமும் இல்லாத ஒருவரால் ஒரு நகைச்சுவைகூட உண்டாக்க முடியாது என்பதே எனது கருத்து.

**துயரத்தில் இருந்து தற்காலிகமாக விடுபடுவதற்காகவே நகைச்சுவை தேவையாய் இருக்கிறது என்று கருதுகிறீர்களா?**

இல்லை. வாழ்க்கை அதை விடவும் பெரியது. துயரத்தில் இருந்து விடுபடும் முயற்சி என்றால், மக்கள் கூட்டம் கூட்டமாகத் தற்கொலைதான் செய்துகொள்வார்கள். வாழ்க்கையில் இருந்து வெளியேறி விட வேண்டும் என்று நினைப்பார்கள். வாழ்க்கை மிக அரிதான அற்புதமான ஒன்று. நாம் அனைத்துவிதமான சூழ்நிலைகளிலும் வாழ நம்மைப் பழக்கிக்கொள்ள வேண்டும். அதீத துயர் நிலையிலும் வாழ்ந்திருக்க வேண்டும். நான் வாழ்க்கையை எப்போதும் கொண்டாடவே செய்கிறேன். அனுபவத்திற்காகவாவது அனைத்துவிதமான சூழல்களிலும் வாழ வேண்டும். வெறும் அனுபவத்திற்காகவாவது!

நகைச்சுவை ஒருவனை இயல்பானவனாக இருக்கவே பேருதவி செய்கிறது என்று நினைக்கிறேன். அதிகளவிலான துயரத்துடன் வாழ்க்கையில் நம்மால் பயணிக்க முடியும். அது வாழ்க்கையின் ஒரு கூறு. அதே சமயத்தில், எதுவொன்றையும் எதிர்ப்பதற்கும் நம்மிடம் மற்றொன்று இருக்கவே செய்கிறது. துன்பம் வாழ்க்கையின் அத்தியாவசியமான ஒன்றாகவும், அதனை எதிர்கொள்வதற்கான சாத்தியத்தை நகைச்சுவை நமக்கு அளிக்கிறது என்றும் கருதுகிறேன். நகைச்சுவை உலகளாவிய ஒன்று. அது கூடுதலாகவோ அல்லது குறைவாகவோ கருணையுணர்வில் இருந்தே பிறப்பெடுத்திருக்க வேண்டும். ●

ராம் முரளி
<raammurali@gmail.com>

# பெண்கள் சொல்ல மறுக்கும் கதைகள்



மாலதி மைத்ரி

காதல், இல்லறம் என்னும் சங்கமங்களில் நீரினுள் நீர் போல், செம்புல பெயல் போல் இருவுடலும் மனமும் அன்பால் ஒருமித்துவிடுவதில்லை. ஒன்றையொன்று ஆதிக்கம் செய்யும் ஓயாத சமரில், பனிப்போரில், ஒன்று மற்றொன்றுக்குப் பணிந்து, தியாகம், விட்டுக்கொடுத்தலென வாழ்வுக் கடந்துவிடுகிறது. இரு தன்னிலைக்கிடையில் சமத்துவம் அழித்து / அழிந்து வாழ்க்கைத் தோற்று, சமூக ஒப்பந்தம் வெற்றியடையவும் சமூகத்தைத் திருப்திப்படுத்தவும் ஆயுள் முழுதும் போராடுகிறார்கள்.

குடும்ப அமைப்பு தன்னளவிலேயே ஒரு வன்முறை அமைப்பு. பாசிசத்தின் நுண் அலகாக இயங்கும் குடும்பத்தில், அதன் உள்ளீடான குடும்ப வன்முறைகளின் அளவீடுகள், குடும்பத்திற்கு குடும்பம் கூடுதல் குறைவு விகிதம் மட்டுமே மாறுபடுகின்றன. 'லட்சிய குடும்பம்' வன்முறையற்றக் குடும்பத்தை உருவாக்கும் முயற்சியில், சித்தாந்த ரீதியாக நாம் தொடர்ந்து தோற்றுக் கொண்டிருக்கிறோம்.

பிறர் பொருட்டு விட்டுக்கொடுத்தலே வாழ்க்கை என்றானபோது, சமூகத்தின் வழிகாட்டுதலில் திணிக்கப்பட்ட அல்லது விரும்பி ஏற்கப்பட்ட 'புனித' உறவுகளின் பொருட்டு, பெண்கள் பணிந்து கிடப்பதை விதியாக்கி வைத்திருக்கிறது, சனாதன சமூகக் கட்டமைப்பு. வன்முறையான, அவமானகரமான காதல், மணவுறவை விட்டு விலகுதல், முறித்துக்கொள்ளுதல் உயிர்களைப் பலியிடும் சமூகக் கூட்டுச்சதியின் சடங்காகிவிடுகிறது வாழ்க்கை. உயிர்ப் பலியிலிருந்து பிழைக்க முடிந்தால், அறிந்தும் அறியாமலும் நேர்ந்த காதலுறவு, மணவுறவு விபத்தில் பிய்ந்தத் தசையை வெட்டியெறிந்து, ஒருவருக்கொருவர் ஆறா ரணத்துடன் மீள வேண்டியிருக்கிறது.

மரபான திருமணப் பந்தம் ஆணுக்குத் தரும் சிறப்பு முன்னுரிமைச் சலுகை எதிர்பார்ப்பில் மணவுறவுக்குள் நுழையும் ஆண்; அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சியால் தமிழ்ச் சமூகம் நிலவுடைமை ஆதிக்கத் திலிருந்து முதலாளித்துவத்தை நோக்கி மெல்ல நகர்ந்து, உற்பத்தி, பொருளாதாரம், நகரமயமாதல், கல்வி, வேலை, மனித மதிப்பு, மனிதவுரிமை, உணவு, உடை, நுகர்வுப் பண்பாட்டுத் தளங்களில், கலாச்சாரத் தளங்களில் நவீனமடைந்துவரும் சமூகம், திருமண உறவிலும் நவீனமடைந்திருக்க வேண்டும்; குறிப்பாக நவீனக் கல்வி, வெளியுலகத் தொடர்புகள், உலகமயமான நுகர்வுக் கலாச்சாரம் தன் கணவனை நவீன மனிதனாக நாகரிக மனிதனாக மாற்றியிருக்குமென்ற எதிர்பார்ப்பில் வரும் பெண், தேனிலவுப் பயணத்தில் தாங்கள் ஒருவருக்கொருவர் ஏற்றத் துணையில்லையென்று வெளித்தெரியும் விரிசலுடனே வாழ்க்கையைத் தொடங்கிவிடுகிறார்கள். பரஸ்பரம் மனைவி - கணவன் குடும்பத்து மனிதர்களுடன் பூர்த்திசெய்ய வேண்டிய கடமைகள், அதில் விழும் அதிருப்தி முடிச்சுகள், சிக்கல்கள் விரிசலை மேலும் அகலமாக்குகின்றன. உறவின் வெடிப்பை இணைக்க இரு குழந்தைகளைப் பெற்றுப் பாலமாக்கிக் கொள்கிறார்கள் சரோவும் ரவியும்.

சரோ திருமண உறவுக்கு வெளியே புதியக் காதலைத் தேடிக்கொள்வதை நியாயப்படுத்தவும் வாசகரின் கருணையை யாசிக்கவும், இக்கதைச் சுருக்கம் வாசகருக்குத் தேவைப்படுகிறதா சரோவுக்குத் தேவைப்படுகிறதா; குழப்பமான நிலையிது. ரவியும் தனதுப் பங்குக்கு வேறொரு பெண்ணுடன் உறவிலிருக்க இதே காரணத்தை ஊகித்துக்கொள்ள அனுமதியளிக்கிறது பிரதி. இதில் எது மனமொத்த வாழ்வு. இரண்டும் உண்மையென்றால் ஒன்று நிலைக்க மற்றொன்றை ஏன் மறுத்து பிரிய வேண்டியிருக்கிறது. குழந்தைகள் தன் கையிலிருக்கும் பொம்மையை விடுத்து அடுத்த குழந்தையின் கையிலிருக்கும் பொம்மையை பறித்து விளையாடுவது போல், வளர்ந்தவர்களும் விளையாடிக் களிப்பதுதான் வாழ்வா. சலித்ததும் உன் பொம்மையை நீயே வைத்துக்கொள் எனக்கு என் பொம்மையிருக்கிறது; நான் போகிறேனென்று குழந்தைகள் போல் கிளம்பிவிடும் பிள்ளை விளையாட்டா.

குடும்ப சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்டுக் கடமையாற்றி மகிழ்விக்கும்'பதிவிரதா பத்தினிகள்' மனைவியாக அமைந்தாலும், ஆண் இல்லற தர்மத்துக்கு வெளியே மற்றொரு பெண்ணை அல்லது பெண்களை, பாலியல் தொழிலாளிகளை நாடுவதுப் பாதகமென உரைத்த வரலாறு உண்டா இங்கே. குமாருக்கு அளிக்கப்பட்ட இச்சுதந்திரம் சரோவுக்குப் பிரதிக்குள் ஏன் மறுக்கப்பட்டது. புனைவாகக் கூட



‘குற்றமிழைக்க’ ஒரு பெண்ணை மொழிக்குள் அனுமதிக்காமல் மரபை மீறாமல் நாவல் பயணிக்கிறது.

ரவி தன்னை விட்டு வேறொரு பெண்ணுடன் உறவாடுவதை, தனக்கு இழைத்த அவமானமாக துரோகமாகக் கருதும் சரோ உடைந்துப் போகிறாள். “அவன் மீது குற்றஞ்சாட்ட அவள் ஒன்றும் குற்றமற்றவள் அல்லவே. அவர்களிருவருக்கும் ஆணொன்றும் பெண்ணொன்றுமா யிருந்த சிறுபிள்ளைகள் கதி என்னாகும் என்ற கவலை அடிக்கடி வந்து போனது.”

சங்கக் காலத்திலிருந்து சமகாலம் வரையிலும் திருமண உறவுக்கு வெளியே ஆண்களின் ‘காதல் லீலைகளை’ கொண்டாடுவது தமிழிலக்கிய மரபாயிருக்கிறது. புனைவு என்ற கூரையின் கீழ், சமூக யதார்த்தம் வாழ்வியல் அனுபவமென்று ஆண்களின் பாலியல் வக்கிரக் கதைகளைக் குற்றவுணர்வற்ற குழந்தைகளாக பெற்றுப்போட்டுச் சீராட்டிக் கொண்டிருந்த தமிழ்ப் பிரதிகள் முதன்முதலில் தமிழில் ஒரு பெண் திருமண உறவுக்கு வெளியே கொள்ளும் உறவை சொல்லப் புகுமுன், முதல் பக்கத்திலேயே பெண்ணைக் குற்றவாளியாக்கி ஆசிரியர் கதையைத் தொடங்குகிறார். மனப்பொருத்தமற்ற மணவுறவு கசப்பிலிருந்துதான் சரோ வேறுதுணையை நாடுவதாக அவள் மீதான இரக்கத்தை வாசகரிடம் கோரும் உத்தியைக் கதைசொல்லி முழு பிரக்ஞையுடன் பிரதிக்குள் கையாள்கிறார்.

மனைவி, குழந்தைகளுடன் வாழும் குமார், சரோவுடன் பழகுகிறார். பெரியாரை புரிந்துகொள்ள முடியாத ‘குமுதம்’ போன்ற பத்திரிகைகள் வழங்கும் சினிமா செய்திகளுடன் தனது அறிவை மட்டுப்படுத்திக்கொண்ட சுப்பு என்ற ‘அர்த்தமற்ற மனுசியை’ விட்டு சரோ என்ற ‘அறிவார்த்த பெண்ணுடனான’ உறவை நியாயப்படுத்துகிறார் கதைசொல்லி. என்றாலும் வாசகர்களுக்கு அது ‘குற்றமாக’ உறுத்தாது என்பது நிஜம்தானே.

சரோவும் குமாரும் காதல், காமம், கலவி, மனித இச்சைகள் குறித்துத் தத்துவார்த்தமாக உரையாடுகிறார்கள். அடிக்கடி தங்கள் இருவருக்குமான உறவு இப்படியே நீடிக்காது என்பதையும், இதற்காக சாக முடியுமா என்றும் கேட்டுக்கொள்கிறார்கள். குமாருக்கு புகை, மது போல் சரோவுடனான உறவும் ஒரு

பழக்கமாகக் கையாளத் தெரிகிறது.

முன் திட்டமிட்டபடி பூங்காவில் சந்திக்க செல்லும் சரோவுக்கு, அங்கே குமார் தனது கல்லூரி தோழியுடன் பேசிக் கொண்டிருந்தது பதட்டத்தைத் தருகிறது. குமாரிடம் கோபப்படுகிறாள். குமார் தன் இருப்பை அவமதித்துவிட்டானோ என்று சந்தேகம் கொள்கிறாள். ரவியும் குமாரும் தன் வாழ்க்கையில் யார், அவர்கள் வாழ்க்கையில் தான் யார் என்ற கேள்விகள் துரத்தினாலும், அக்கணத்தில் வாழ்ந்து கடந்துவிடத் துணிகிறாள் சரோ. அதற்காக வலிகளைத் தாங்கத் தயாராக இருக்கிறாள். இப்பிறவிப் பெருங்கடலை தன்னால் வெற்றிகரமாய் நீந்திக் கடக்க முடியுமென்றும் நம்புகிறாள்.

வீட்டு சாப்பாடு நன்றாய் இருந்தாலும் ஆண்கள் ஓட்டல் சாப்பாட்டை விரும்புவது யதார்த்தமென்றும் இயல்பென்றும் நம்ப வைத்திருக்கிறது ஆண்மையச் சமூகம். தினமும் சொந்தச் சாப்பாடு பெண்களுக்கும் சலிக்காதா, பெண்களுக்கு ஓட்டல் சாப்பாடு ருசிக்காதா என்ன? பெண்கள் விரும்பிவிட்டால் இலவசமாக கிடைக்கும் நிலையில் ஆண்கள் செலவழித்தால்தான் கிடைக்கும். பெண்ணின் இருப்பை ஆணுக்கான உணவுப் பதார்த்தமாய் தரம் தாழ்த்திய சமூகம் இல்லறத்தை 'புனிதம்' என்பது அடிப்படையிலேயே முரணானது.

மிக இயல்பாய் மிகத்தெளிவாய் குற்றவுணர்வின் நிழல் அண்டாமல் 'சுதந்திர புருசனாய்' கதைக்குள் நடமாடுகிறான் குமார். சரோவுடனான உறவில் பிரச்சினை எழும்போது தனது நிறுத்தம் வந்தவுடன் இறங்கும் பயணியென எப்போதும் தயாராய் இருக்கிறான். குமாருடனான உறவை சரோ தனது வெளிப்பாடாய் கருதுகிறாள். ஆனால், அதுவும் வேறொரு உரையாடல் நினைவுகூரலில் சரோவின் சுயமரியாதையை காலடியில் கசக்கி எறிகிறது.

"நீங்க மட்டும் என்ன சொல்லலையா யாராவது என்னை புகழ்ந்துட்டா முந்தானை விரிப்பவள்னு."

பெண்கள் காதலித்தாலும், பாலியல் இச்சையின் தீரா வேட்கை அனுபவிக்கத் துணிந்தாலும், அதிலும் ஒருத்தனை மட்டுமே நாடி உண்மையாக இருக்க வேண்டுமா? சுதந்திரக் காதல் ஆண்களுக்குச் சூதாட்டமாக இருக்கும் போது பெண்கள் செல்லுமிடமெல்லாம் ஒழுக்க விதிகளைக் காட்டி ஏன் மிரட்டப்படுகிறார்கள்?

**மனித இனம் பலபேரை நேசிக்க, உறவுகொள்ள இச்சை கொண்டது. ஒருதார மணமிங்கிறது ஒப்பந்தம்தான். அதை ஒழுக்க விதியாக நினைக்கல. அதனால்தான் அவருடைய நடவடிக்கையில் என்னால் தப்புக் கண்டுபிடிக்க முடியல..**

பெண் உடல் மீது சுமத்தப்பட்ட புனிதங்களின் அழுத்தத்தை, சமூக மரபை, ஒழுக்க விதிகளைச் சுமக்க மறுக்கும் சிறு கலகமே சிவகாமியின் 'குறுக்கு வெட்டு' நாவல். பெண்ணின் கோணத்தில் நகரும் கதை மேற்தளத்தில் புனைவையும் கீழ்தளத்தில் குறுக்கு வெட்டாக, அபுனைவால், புனைவின் பிரதியை அறுத்துக் மரபுகளைக் கலைத்துப் போடுகிறார். வேதாளம் விக்கிரமாதித்தன் தர்க்கத்தின் வழி புனைவில் இடையீட்டுப் பிரதியாய் ஊடாடும் ஒரு மேலதிக அபுனைவையும் கட்டமைத்திருக்கிறார், சிவகாமி.

இக்கதை சொல்லல் உத்தி வெற்றிகரமாய் நாவலுக்குள் மிகப்பெரிய உடைப்பை நிகழ்த்துகிறது. இவ்வுத்தி கதையாட்டம் மொழியாட்டமென வாசகருக்கு பிரமிப்பை அளிக்கிறது. இவ்விளையாட்டுக்கு நவீன தமிழிலக்கிய உலகு இன்னும் தயாராகவில்லை என்பதை இந்நாவல் வெளிவந்து இருபதாண்டுகள் கழித்துப் புரிந்துகொள்ள முடிகிறது. இந்நாவலைப் பேசப் புகுவதுத் தேனிக்கூட்டில் கல்லெறிந்த கதையாகிவிடுமென்ற தயக்கமும் காரணமாக இருக்கலாம். 2014இல் ஆங்கிலத்தில் 'Cross Section' வெளிவந்து உலகெங்கும் பரவலாக சென்றடைந்திருக்கிறது என்பதை இங்கே குறிப்பிடுவது, ஆண்மையத் தமிழிலக்கிய உலகுக்கு உவப்பான செய்தியாக இருக்குமா என்று தெரியவில்லை.

நாவலுக்குள் குடும்பம், சமூகம், ஒழுக்கம், புனிதம், புராணம், இதிகாசம், வரலாறு, அறிவியல் அனைத்தும் உபகதைகளாக துண்டுக்கதைகளாக வந்து இடையீடு செய்கின்றன. பெண் - ஆண் உறவுக்கிடையில் இக்கதைகளை இட்டு நிரப்பி, சமூக உளவியலை, உறவுச் சிக்கல்களை இழைப்பிரித்து, சிக்கெடுத்து, மனிதர்களின் கதைகளின் வழி காதல், இச்சை, காமம், கலவி நோக்கங்களை முன்வைத்து கதாபாத்திரங்களின் உரையாடல்கள் மூலம் 'புனித மரபை' அசைத்துப் பார்க்கிறது பிரதி. ஒழுக்கம், ஒழுக்கமின்மை முரண்பாட்டை வேதாளம் விக்கிரமாதித்தன் வாதங்கள் வழி சிதைத்து மேலும் கீழும் குறுக்கு வெட்டாகக் கடக்க வாழ்வின் எதிர்திசைப் பாதைகளைத் திறக்க முயல்கிறது நாவல். இப்பிரதிக்குள் வாசகர் நுழைந்து கதை சொல்லிய அல்லது கதை சொல்லாத எந்த ஒரு இழையும் உருவிக் கதைக்கு எதிராக நிறுத்த முடியாது என்பதே இப்புனைவின் வெற்றி.

சரோ தனது 'குற்றத்துக்காக' குழந்தைகள், கணவன், அலுவலகம், நண்பர்கள், உறவுகள் அனைவரிடமும் மறைக்கவும் பொய் சொல்லவும் வேண்டியிருக்கிறது. குற்றவுணர்வில் துடிக்கவும் தவிக்கவும் நேர்ந்தாலும் இந்த உறவு பிடித்திருக்கிறது சரோவுக்கு. குமாருக்கும் சரோவைப் போல் குடும்பமிருக்கிறது, குழந்தையிருக்கிறது, மனைவியிருக்கிறார், அலுவலகமிருக்கிறது, நண்பர்களிருக்கிறார்கள், உறவுகளிருக்கிறார்கள். அவன் எங்கும் பொய் சொல்லி மறைக்க வேண்டிய

அவசியமில்லை, குற்றவுணர்வில்லை; உண்மையை பெருமையாய் சொல்ல முடியும். "நான் காதலில் இருக்கிறேன்' இவர் எனது காதலி" என்று, சரோவை தனது வீட்டுக்கு அழைத்து சென்று சுப்புவிடம் அறிமுகப்படுத்துகிறான். சுப்புவை குமார் ஒரு உயிருள்ள மனிசியாகவே மதிக்கவில்லை.

"பாரு குமார், ஆபீஸிலிருந்து என்ன காரணத்தைச் சொல்லிக் கிளம்ப முடியும்? இரண்டு மூன்று மணிநேரம் நிம்மதியா செலவிடுகிற மாதிரி எந்த இடமிருக்கு சொல்லு பார்ப்போம். சாய்ந்தரம் வீட்டுக்கு டயத்துக்குள்ள போகலைன்னா பிள்ளைங்க கதி? அவர்தான் என்ன நினைப்பார்?"

"...."

"சரி வர்ற மாதம் ரெண்டாம் சனிக்கிழமை எங்கயாச்சம் கிளம்பலாம். தயாராயிரு."

"எங்க போகலாம்"

"எப்பவும் நான்தான் சொல்லனுமா? நீங்க சொல்லுங்க இந்தவாட்டி."

"எனக்கு எந்த இடமும் பரவாயில்லை. உனக்குத்தான் அவங்க பாத்திருவாங்க, இவங்க பாத்திருவாங்கன்னு பயம். உனக்குத் தெரிஞ்சவங்க வராத இடம் உனக்குத்தானே தெரியும்."

சமூகம் பெண்களுக்கு அளித்திருக்குமிடத்தை, பெண் மீதான கண்காணிப்பை அவள் மீது செலுத்திக் கொண்டிருக்கும் உடல் - உளவியல் வன்முறைகளை மொழிக்குள் வரையும் உரையாடல் இவை. ஒழுக்கம், காதல், தாம்பத்தியம், குடும்பம் என்ற போலிமைகள் தரும் வலியை மீறி, எல்லை மீறாத மீறல்களின் மூலம் சற்றுச் சமூக வரையறைகளைக் கடந்து, சாகசமாய் இன்பம் துன்பத்தை வாழ்ந்து பார்த்துவிடலாம் என்கிறாள் சரோ. வரலாறு சுமத்தும், நிர்ப்பந்திக்கும் வலிமிகுந்த பெண் அடையாளத்தில் சிக்கித் திணரும் மூச்சுத் திணறலின் வெளிப்பாடே இவ்வாக்கம்.

"மனித இனம் பலபேரை நேசிக்க, உறவுகொள்ள இச்சை கொண்டது. ஒருதார மணமிங்கிறது ஒப்பந்தம்தான். அதை ஒழுக்க விதியாக நினைக்கல. அதனால்தான் அவருடைய நடவடிக்கையில் என்னால் தப்புக் கண்டுபிடிக்க முடியல.."

ரவி தேடிக்கொண்ட சித்ராவுடனான உறவுக்காக சொல்லும் சமாதானம் என்றாலும் சரோவுக்கும் பொருந்தும்தானே. ஆனால், ரவியால் சரோவின் போக்கை இவ்வளவு இயல்பாக ஏற்க முடியவில்லை. அவ்வீடு காவல் நிலையமாகிறது. சரோ, ரவியின் முன் விசாரணைக் கைதியாக நிறுத்தப்படுகிறாள். தர்க்கங்கள், வாதங்கள் தோற்று சரோவை அடித்துத் துவைத்து, ரத்தத்தையும் மூத்திரத்தையும் சுவைத்து, ஆண் திமிரின் ஆணவ வெறியாட்ட வெற்றியில், தனது புருஷத்துவத்தை நிலைநாட்டிக் கொள்கிறான் ரவி.

கதைசொல்லியின் கூற்று போல், இது ஒரு சரோ, ஒரு குமார், ஒரு ரவி பற்றிய கதையில்லை; ஆயிரமாயிரம் சரோக்கள், குமார்கள், ரவிக்கள் மற்றும் சொல்லப்படாதச் சுப்புக்களைப் பற்றிய கதை. பிரதிக்குள் ஆசிரியரின் மரணத்தைக் கோரும் வாசகரை இப்பிரதிக்குள் கொன்று களிக்கிறார் நாவலாசிரியர். வாசகரென்று பன்மையில் குறிப்பிட்டாலும், ஆண்மைய சமூகத்தில் வாசிப்பு அரசியல் பெண்மையமாகும் வரை, வாசகரைக் கொன்றுவிடுவது அவசியம்தான். வாசகரின் மரணத்தையும் சுப்புவின் மரணத்தையும் பிரதிக்குள் நிகழ்த்தி சரோக்கள், குமார்கள், ரவிகளை அவர்கள் உலகத்தில் வாழவிட்டிருக்கிறார் கதைசொல்லி.

சமூகம் பெண்களின் மீது சுமத்தப்பட்ட கற்பு, ஒழுக்கம், மதிப்பீடுகள், மரபுகளை மீறுவதன் மூலம், சரோ தன் சுயமுடிவில், சுயதேர்வில் அனுபவிக்கும் இன்ப துன்பத்தை, சுப்பு கற்பு, ஒழுக்கம், மதிப்பீடுகள், மரபுகளுக்கு பணிவதன் மூலம் அதே இன்ப துன்பத்தை அனுபவிக்கிறார். சரோ மணவுறவை மீறி துணிந்து அடையும் துயரும் வலியும் சுப்பு மணவுறவுக்குள் பணிந்து அடையும் துயரும் வலியும் சமநிலையில்




இருந்தாலும், சரோ பொருளாதாரச் சுதந்திரமென்ற சிறகொன்றை கூடுதலாய் அணிந்திருக்கிறாள்; விட்டு விடுதலையாகும் சாத்தியத்துடன். குடும்பத்துக்குள் பெண் அறிவாளியாக இருந்தாலும் அறியாமையிலிருந்தாலும் ஆணின் கயிற்றால் ஆட்டுவிக்கும் பொம்மைகளா? இப்பிரதியில் வேதாளம் முன்வைக்கும் கேள்விக்கு விக்கிரமாதித்தனின் தலைபோல் நம் தலைகள் சுக்குநூறாக வெடிக்கக் காத்திருக்கின்றன. நாம் வேதாளத்தைக் கொன்று நம் தலைகளை காப்பாற்றிக் கொள்வோம். ●


**மாலதி மைதிரி**

anangufeministpublication@gmail.com>


---


குறுக்குவெட்டு - ப. சிவகாமி; பக்கங்கள் 172; விலை ரூ. 170; வெளியீடு: அணங்கு பதிப்பகம், மின்னஞ்சல்: anangufeministpublication@gmail.com தொலைபேசி: +91 95993 29181

## கோதைநாயகி அம்மாள்

# தேசியமும் சேவையும்



பாவண்ணன்

கேரளத்தில் வைக்கம் என்னும் நகரில் 1925ஆம் ஆண்டில் தீண்டாமைக்கு எதிராக ஒரு போராட்டம் நடந்துகொண்டிருந்தது. அந்நகரத்தில் இருக்கும் மகாதேவர் ஆலயத்துக்கு செல்லும் எல்லா வழித்தடங்களில் எல்லா வகுப்பினரும் வேறுபாடின்றி நடந்துபோகும் உரிமைக்காக அப்போராட்டம் முன்னெடுக்கப்பட்டிருந்தது. அதில் கலந்துகொள்வதற்காக திருவனந்தபுரத்தை நோக்கி புறப்பட்ட காந்தியடிகளும் கஸ்தூர்பாவும் சென்னையில் மூன்று நாட்கள் தங்கினார்கள். சீனிவாச ஐயங்கார் என்பவருடைய இல்லத்தில் காந்தி தங்குவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. நகரத்தின் பல பகுதிகளிலிருந்து கூட்டம்கூட்டமாக மக்கள் அந்த வீட்டுக்கு வந்து காந்தியடிகளைப் பார்த்துவிட்டுச் சென்றார்கள்.

ஒரு தொண்டர் தம் ஆறுவயது மகளுடன் அண்ணலைப் பார்த்து வணங்கினார். அண்ணலும் அவரை வணங்கி அருகில் அழைத்து உரையாடினார். எங்கே வசிக்கிறீர்கள், என்ன தொழில் செய்கிறீர்கள், இராட்டையில் நூல் நூற்கிறீர்களா, கதர் அணிகிறீர்களா என்பது போன்ற எளிய உரையாடல்கள். உரையாடியபடி சிறுமியை அருகில் அழைத்து தன் மடியில் அன்புடன் அமரவைத்துக்கொண்டார் காந்தி. தொண்டர் சொல்லும் பதில்களைக் கேட்டபடியே, அச்சிறுமியுடன் கொஞ்சி விளையாடினார். பிறகு, “இயக்க நிதிக்கு வழங்குவதற்கு என்ன கொண்டு வந்திருக்கிறீர்கள்?” என்று தொண்டரிடம் புன்னகைத்தவாறே கேட்டார், காந்தி. தொண்டர் தன் பையிலிருந்த சிறுதொகையை எடுத்து மகிழ்ச்சியுடன் வழங்கினார்.

அதைப் பெற்றுக்கொண்ட காந்தியடிகள் விளையாட்டாக தன் மடியிலிருந்த சிறுமியிடம், “இந்தத் தாத்தாவுக்கு நீ என்ன கொடுக்கப்போகிறாய்?” என்று கேட்டார். அந்தச் சிறுமிக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் அருகில் நின்றிருந்த தன் அப்பாவை ஏறிட்டுப் பார்த்தது. “தாத்தாவுக்கு உன் கையிலிருக்கும் வளையல்களை கழற்றிக் கொடு அம்மா” என்று சொன்னார் அவர். அப்பாவின் சொல்லைத் தட்டாத சிறுமி வளையலணிந்த கைகளை காந்தியடிகள் முன்னால் நீட்டி எடுத்துக்கொள்ளும்படி சொன்னது. காந்தியடிகளே சிறுமியின் வளைகளைக் கழற்றி நிதிக்கணக்கில் சேர்த்துக்கொண்டார். அதைப் பார்த்ததும் காந்தியடிகளை சந்திப்பதற்காக நின்றிருந்த பலரும் ஒவ்வொருவராக தாம் அணிந்திருந்த ஆபரணங்களை கழற்றி அவரிடம் வழங்க தொடங்கிவிட்டனர். நெகிழ்ச்சியின் உச்சத்தில் அன்று தன் கழுத்தணிகளையும் கை வளையல்களையும் தாராளமாக காந்தியடிகளிடம் எடுத்துக் கொடுத்த பல பெண்களில் கோதைநாயகி அம்மாளும் ஒருவர்.

அன்று மாலையில் கஸ்தூர்பா திருவல்லிக்கேணியில் ஒரு நிகழ்ச்சியில் பங்கேற்று உரையாற்றினார். இராட்டையில் நூல்நூற்பதைப் பற்றியும் அந்நியத் துணிகளை விலக்கி கதராடைகள் அணியவேண்டிய அவசியத்தைப்பற்றியும் சிறிது நேரம் பேசினார். அக்கூட்டத்திலும் கலந்துகொண்டார் கோதைநாயகி அம்மாள். கஸ்தூர்பா அம்மையாரின் எளிய ஆடைகள் அவர் மனத்தைக் கவர்ந்தன. கூட்டத்துக்கு வந்திருந்த எண்ணற்ற பெண்கள் தாம் அணிந்திருந்த மோதிரங்கள், வளையல்கள், தோடுகள் என பல நகைகளைக் கழற்றி நிதிக்காகக் கொடுத்தனர். எவ்விதமான ஆபரணங்களும் இல்லாமல் எளிய கதர்ப்புடவையை மட்டும் அணிந்திருந்த கஸ்தூர்பாவின் தோற்றத்தில் இருந்த வசீகரமும் மென்மையும் உறுதியும், படிந்த குரலில் பேசிய அவருடைய நாவன்மையும் கோதைநாயகியை மிகவும் கவர்ந்தன. அதுவரை எப்போதாவது ஒருசில முறைகள் மட்டுமே கதர்ப் புடவைகளையும் மற்ற நேரங்களில் பட்டுப் புடவைகளையும் அணிந்து பழகிய கோதைநாயகி, இனி எப்போதும் கதர்ப் புடவைகளை மட்டுமே அணிவதென அக்கணத்தில் உறுதி பூண்டார். அத்துடன் பொதுநன்மைக்காக பொதுமக்களுக்கு புரியும் வகையில் மேடைகளில் உரையாற்றும் முடிவையும் எடுத்தார்.

கோதைநாயகியின் குடும்பத்தில் தேசபக்தி மிக்க உரையாடல்களுக்கும் சுதந்திரப் போராட்டம் பற்றிய உரையாடல்களுக்கும் தினசரிப் பேச்சுகளில் எப்போதும் இடமுண்டு. அடிக்கடி அவர்கள் வீட்டுக்கு வருகை தரும் அன்னிபெசண்ட் அம்மையாருடன் நிகழ்த்தும் உரையாடல்கள் வழியாக நாட்டு நடப்புகளைப் பற்றியும் அரசியல் போக்குகள் பற்றியும் அனைவரும் தெரிந்து வைத்திருந்தார்கள். கோதைநாயகியின் கணவர் பார்த்தசாரதிக்கு இளமைமுதல் காந்தியடிகள் மீது ஈர்ப்பிருந்தது. 1915ஆம் ஆண்டில் சென்னைக்கு வந்த காந்தியடிகள் விக்டோரியா ஹால் திறந்தவெளியில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் நிகழ்த்திய



உரையை நேரில் கேட்டவர் அவர். ஆப்பிரிக்காவில் தன்னுடன் இணைந்து உரிமைகளுக்காகப் போராடி இளம்வயதிலேயே மறைந்துவிட்ட எளிய மனிதர்களை புகழ்ந்து பாராட்டிய காந்தியடிகளின் பெருமையை மீண்டும் மீண்டும் தன்னுடன் உரையாடுகிறவர்கள் அனைவரிடமும் பகிர்ந்துகொள்ளும் பழக்கமுள்ளவராக இருந்தார்.

கோதைநாயகியும் இளமைமுதல் தேசபக்தியை பற்றிய செய்திகளை கேட்டு வளர்ந்தவர். திருவல்லிக்கேணியில் பாரதியார் வசித்துவந்த துளசிங்கப்பெருமாள் கோவில் தெருவில்தான் கோதைநாயகியின் தாய்வீடும் இருந்தது. ஒருநாள் கோதைநாயகி வீட்டில் ஏதோ வேலையைச் செய்துகொண்டே பாரதியாரின் பாடலொன்றை இசையுடன் பாடிக்கொண்டிருந்தார். தற்செயலாக அப்போது தெருவில் சென்றுகொண்டிருந்த பாரதியார் அதைக் கேட்டுவிட்டு ஒருகணம் நின்றுவிட்டார். கோதைநாயகியின் குரல் அவ்வளவு வசீகரமாக இருந்தது. பாடல் முடிந்த பிறகு வீட்டு திண்ணையில் இருந்தவரிடம், "வீட்டுக்குள் பாடுவது யார்?" என்று கேட்டார். பாரதியார். "என் மகள்தான் பாடுகிறாள். கோதைநாயகி என்று பெயர்" என்று சொல்லிவிட்டு மகளை அழைத்து பாரதியாருக்கு அறிமுகப்படுத்தினார். பிறகு மகளிடம், "கோதை, ஒரு பாட்டை இப்போது நீ பாடினாயே, அந்தப் பாட்டை எழுதியவர் இவர்தான். பாரதியார்" என்று சொன்னார்.

கோதைநாயகி புன்னகையுடன் பாரதியாரை வணங்கினார். உற்சாகம் கொண்ட பாரதியார், "உன் குரல் தெளிவாகவும் வளமாகவும் இருக்கிறது கோதை. தொடர்ந்து பாடிப் பழகு" என்று ஊக்கப்படுத்தினார். பிறகு "இப்போது நான் ஒரு பாட்டுப் பாடுகிறேன். நீ அதைப்போலவே பாடிக் காட்டவேண்டும்" என்று புன்னகைத்தார். பிறகு ஒருகணம் கூட யோசிக்காமல், "ஜெயபேரிகை கொட்டடா" என்னும் பாட்டை உணர்ச்சிமயமான குரலில் பாடினார். பாடலின் வரிகளை அப்படியே உள்வாங்கிக்கொண்டார் கோதைநாயகி. அடுத்தநாள் பாரதியார் அதே நேரத்தில் அந்த வீட்டுக்கு வந்தார். கோதைநாயகி அவர் முன் சென்று அவர் பாடிய அதே உணர்ச்சி வேகத்துடன் ஓங்கிய குரலில் அந்தப் பாட்டைப் பாடிக் காட்டினார். பெருமையோடும் மகிழ்ச்சியோடும் கோதைநாயகியைப் பாராட்டினார் பாரதியார். அன்றுமுதல் பாரதியார் தாம் புதிதாக எழுதும் பாடல்களையெல்லாம் கோதை நாயகியிடம் கொண்டுவந்து தருவதும் கோதை அவற்றை மனப்பாடம் செய்து பாடுவதும் வழக்கமானது. "ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே" பாட்டை கோதைநாயகிக்காகவே எழுதினார் பாரதியார்.

தொடக்க காலத்தில் கோதைநாயகி அவ்வப்போது கதர்ப் புடவைகளை அணியத் தொடங்கியதற்குக் காரணமாக இருந்தவர் அவருடைய கணவர் பார்த்தசாரதியே. 1919ஆம் ஆண்டில் தமிழ்ப் புத்தாண்டு நாளில் எல்லாச் செய்தித்தாள்களிலும் ஜாலியன்வாலாபாக்கில் நடந்த படுகொலை சம்பவத்தைப் பற்றிய செய்தி வெளியாகியிருந்தது. அதைக் கண்டு மனவேதனைக்குள்ளான பார்த்தசாரதி தேசிய இயக்கத்தில் ஈடுபட்டுத் தொண்டாற்றவேண்டும் என முடிவெடுத்தார். தன் முடிவை கோதைநாயகியிடமும் தெரிவித்தார். அன்றே தான் அணிந்திருந்த பட்டுச்சரிகை வேட்டியையும் அந்நிய ஆடைகளையும் கொண்டுவந்து தெருவில் குவித்து தீக்கிரையாக்கினார். கோதை நாயகியும் தம்மிடம் இருந்த அந்நிய நாட்டுப் புடவைகளையும் பட்டுப் புடவைகளையும் கொண்டுவந்து நெருப்பிலிட்டுச் சாம்பலாக்கினார். கதர் அணிந்ததோடு மட்டுமன்றி, இருவரும் சேர்ந்து கதர்ப் பிரச்சாரத்திலும் ஈடுபட்டனர்.

அன்றைய நாட்களில் கதர்த்துணி கித்தான்போல மிகவும் முரட்டுத்தன்மையுடன் இருக்கும். பதினெட்டு முழமுள்ள புடவைகளை கட்டும் பழக்கமுள்ள பெண்கள் கதராடைகளை அணிய மிகவும் சிரமப்படுவார்கள். உடலில் புடவை என்பதே ஒரு பெரிய சுமையாக இருக்கும். ஆயினும் தேசபக்தியின் காரணமாக முரட்டுச்சேலையாக இருந்தாலும் கதரையே அணிந்தார் கோதைநாயகி.

கோதைநாயகியும் அவர்

கணவர் பார்த்தசாரதியும் ஆளுக்கு ஒரு மூட்டை கதர்த்துணியை சுமந்துகொண்டு வீடுதோறும் சென்று கதர் விற்றனர். ஏதோ ஒரு விளம்பரத்துக்காக ஒருநாள் செய்தோம், அது போதுமென்று விட்டுவிடாமல் தொடர்ந்து பல நாட்கள் வெயிலையும் மழையையும் பொருட்படுத்தாமல் அப்பணியை மிகவும் ஈடுபாட்டோடு செய்தார்கள். சில நேரங்களில் திருவல்லிக்கேணி பைகிராப்ட்ஸ் சாலையிலிருந்த கதர்க்கடைக் கிளைக்குச் சென்று கதர் விற்பனைக்கு உதவினார்கள். கோதைநாயகி தெருமுனைகளில் நின்று கதரின் முக்கியத்துவத்தைப் பற்றியும் அவசியத்தைப் பற்றியும் மக்களிடம் எடுத்துரைத்து பிரச்சாரம் செய்தார். மயிலாப்பூர் பெண்கள் சங்கத்தின் சுற்றுப்புற வீதிகளிலும் திருவல்லிக்கேணி பெரிய தெருவிலும் தனிப்பட்ட முறையில் பெண்களைச் சந்தித்து தீவிரமாக கதர்ப் பிரச்சாரம் செய்தார்.

கோதைநாயகியின் தெருப் பிரச்சாரத்தை ஒருமுறை நேரில் பார்த்த சத்தியமூர்த்தி, "இதே பேச்சை நீ மேடையில் நின்று பேசினால் இன்னும் நன்றாக இருக்கும். கதரைப் பற்றி மட்டுமின்றி தேசியச் சிக்கல்கள் பற்றியும் நீ பேசலாம்" என்று ஆலோசனை வழங்கினார். காந்தியடிகளின் கொள்கைகளை மக்களிடையே பரப்பி, அவர்கள் முன்னேற்றத்துக்கு வழிவகுக்கவேண்டும் என்ற எண்ணம் கொண்டிருந்த கோதைநாயகி அக்கணமே அந்தத் திட்டத்தை ஏற்றுக்கொண்டார்.

முதல் கூட்டம் திருவல்லிக்கேணி துளசிங்கப்பெருமாள் கோவில் தெருவிலேயே கங்கைகொண்டான் மண்டபத்தில் ஏற்பாடு செய்யப்பட்டது. பெண்கள் மட்டுமே அக்கூட்டத்தில் கலந்துகொண்டனர். பாஷ்யம் அவர்களுடைய துணைவியார் தலைமையுரை ஆற்ற, கோதைநாயகி சிறப்புரை ஆற்றினார். கோதைநாயகியின் பேச்சுக்கு கூட்டத்தில் நல்ல வரவேற்பு இருந்தது. அவர் உரையைக் கேட்ட சத்தியமூர்த்தி மகிழ்ச்சியுடன் பாராட்டினார்.

ஒருமுறை திண்டிவனத்திலிருந்து சில தொண்டர்கள் சென்னையில் சத்தியமூர்த்தியை சந்தித்து தம் ஊருக்கு வந்து சுதந்திரப்போராட்டம் பற்றி சொற்பொழிவாற்றும்படிக் கேட்டுக்கொண்டனர். அவர்கள் குறிப்பிட்ட தேதியில் வேறொரு நிகழ்ச்சியில் சொற்பொழிவாற்ற அவர் ஏற்கனவே ஒப்புதல் அளித்திருந்த காரணத்தால் புதிய கோரிக்கையை ஏற்றுக்கொள்ள முடியாத சூழலில் இருந்தார். திண்டிவனத்திலிருந்து வந்தவர்களோ அவரை விடவில்லை. "நீங்கள் வர இயலவில்லையென்றால், உங்களுக்குப் பதிலாக வேறு யாரையாவது அனுப்பிவையுங்கள்" என்று கேட்டுக்கொண்டனர். சட்டென அவருக்குக் கோதைநாயகியின் நினைவு வர, உடனே அனைவரோடும் சேர்ந்து சென்று கோதைநாயகியைச் சந்தித்தார். தனக்கு பதிலாக திண்டிவனத்துக்குச் சென்று சொற்பொழிவாற்றிவிட்டுத் திரும்பும்படி கேட்டுக்கொண்டார். சத்தியமூர்த்தியின் சொற்களைக் கட்டளையாக ஏற்றுக்கொண்டு சம்மதமளித்தார் கோதைநாயகி. குறிப்பிட்ட நாளில் நிகழ்ச்சி ஏற்பாட்டாளர்கள் நேரில் வந்து அழைத்துச் சென்றனர். அதேபோல கூட்டம் முடிந்ததும் அவர்களே பொறுப்போடு அழைத்துவந்து வீட்டில் விட்டுச் சென்றனர். திண்டிவனத்தில் முதன்முதலாக ஒரு பெண்மணி மேடையேறிப் பேசியதைக் கேட்டு அனைவரும் வியப்பிலாழ்ந்தனர்.

மேடைப்பேச்சில் ஆற்றலோடு விளங்கினார் கோதைநாயகி. மிகவும் குறுகிய காலத்திலேயே தமிழகமே பாராட்டும் மிகச்சிறந்த பேச்சாளராக பெயர்பெற்றார். விழுப்புரம், கடலூர், சிதம்பரம், விருத்தாசலம், திருவண்ணாமலை, வேலூர், தஞ்சாவூர், திருச்சி, மதுரை என பல வெளியூர்களுக்கும் சென்று பிரச்சாரக் கூட்டங்களில் கலந்துகொண்டார். மேடைதோறும் பாரதியாரின் பாடல்களைப் பாடி கேட்பவர்களிடம் எழுச்சியூட்டினார்.

'ஜெகன்மோகினி' என்னும் இதழை, 1925ஆம் ஆண்டில் கோதைநாயகி வாங்கி நடக்கத் தொடங்கினார். இதழின் முகப்பிலேயே 'பயனுள்ள பொழுதுபோக்கு - சமூக சீர்திருத்தம் -




மற்றும் மறுமலர்ச்சி' என்னும் வாசகத்தை இடம்பெறச் செய்தார். சிறுகதை, நாடகம், நாவல், கட்டுரை என அவர் எழுதிய ஒவ்வொரு படைப்பிலும் பெண்கள் முன்னேற்றம் சார்ந்த கருத்துகளே தூக்கலாக வெளிப்பட்டன. மது, சூது, விபச்சாரம், குதிரைப் பந்தயம் போன்ற தீய பழக்கவழக்கங்களால் விளையும் சீர்கேடுகள், வேலையில்லாத் திண்டாட்டம், தேர்தல் தில்லு முல்லுகள், திரைப் படங்களின் பாதிப்புகள் என அனைத்துவிதமான சமூகச் சீரழிவுகளையும் தம் நாவல்களில் சாடினார் கோதைநாயகி. கலையம்சத்தைவிட சமூகச் சீர்திருத்தக் கருத்துகளுக்கே அவர் முன்னுரிமையளித்தார். தமிழகத்தில் மட்டுமன்றி கோலாலம்பூர், சிங்கப்பூர், பினாங்கு, இரங்கூன், ஆப்பிரிக்கா, மொரிஷியஸ் தீவு என தமிழர்கள் வசிக்கும் பகுதிகளெங்கும் ஜகன்மோகினி இதழுக்கு வாசகர்கள் பெருகினார்கள்.

தேசியப்பணிகளுக்கு நடுவில் கிடைத்த நேரத்திலெல்லாம் ஓய்வின்றி எழுதுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார் கோதைநாயகி. ஒருமுறை வாணியம்பாடி வட்டாரத்தில் பேரணாம்பட்டு என்னும் ஊரில் சொற்பொழிவாற்ற சென்றிருந்தார். கூட்டம் தொடங்குவதற்கு முன்பாக, கோதைநாயகியை பார்ப்பதற்காக ஒரு காவல்துறை அதிகாரி வந்திருந்தார். "பேரணாம்பட்டு முகமதியர்கள்

வாழும் ஊர் என்பதால் காங்கிரஸ் பிரச்சாரத்தால் பிரச்சினை ஏதேனும் எழக் கூடும். நான் சொல்வதை ஒரு முன்னெச்சரிக்கையாக எடுத்துக் கொள்ளுங்கள். நிகழ்ச்சியை ரத்து செய்துவிட்டு திரும்பிச் சென்று விடுங்கள்" என்று ஆலோசனை சொன்னார். கோதைநாயகி அதற்கு உடன்பட மறுத்தார்.

கோதைநாயகி உறுதியான குரலில் "பிரச்சாரத்தில் இந்துக்கள் வாழும்பகுதி,முகமதியர்கள்வாழும் பகுதி எனப் பிரித்து வேறுபாடு பார்ப்பது பிழையான போக்கு. எல்லோரும் இந்நாட்டு மக்கள் என்னும் கண்ணோட்டமே ஒரு தேசியவாதிக்கு இருக்கவேண்டும். காந்தியடிகளிடமிருந்து நாங்கள் அதைத்தான் கற்றுக்கொண்டோம். ஒரு பிரச்சினையும் வராதபடி நான் பார்த்துக்கொள்கிறேன்" என்று அதிகாரியிடம் சொன்னார். கோதைநாயகியின் உறுதியைக் கண்டு வேறெதுவும் கூறாமல் "சரி, நிகழ்ச்சிக்கு எங்களால் முடிந்த அளவுக்கு பாதுகாப்பு அளிக்கிறோம்" என்று மட்டும் தெரி வித்துவிட்டு வெளியேறிவிட்டார் அதிகாரி.

அதிகாரியின் அச்சத்துக்கு மாறாக, அன்று கூட்டம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இரண்டு மூன்று பாரதியார் பாடல்களை முதலில் பாடிவிட்டு சொற்பொழிவாற்றத் தொடங்கினார் கோதைநாயகி. இந்திய நாட்டின் பெருமைகளைப் பற்றியும் சுதந்திரத்தின் அவசியத்தைப் பற்றியும் சுதேசிப் பொருட்கள் வாங்கவேண்டிய தேவையைப் பற்றியும் அந்நியப் பொருட்களை புறக்கணிப்பதைப் பற்றியும் அழுத்தம் திருத்தமாக எடுத்துரைத்தார். காவல்துறை அதிகாரி அஞ்சியதுபோல எதுவும் நிகழவில்லை. மாறாக, முகமதியர்கள் அவருடைய பேச்சை ஆர்வத்துடன் கேட்டனர். விற்பனைக்கு வைக்கப்பட்டிருந்த சுதேசிப் பொருட்களை அனைவரும் விருப்பத்தோடு வாங்கிச் சென்றனர். வீதி தோறும் வண்டிகளில் கதர்த்துணி கொண்டு சென்று விற்பனை செய்யப்பட்டது. எல்லோரும் போட்டி போட்டுக்கொண்டு கதர்த்துணிகளை வாங்கினர்.



கோதைநாயகி, கணவருடன்

எழுத்தாளராகவும் சிறந்து விளங்கிய கோதைநாயகி காந்தியைப் பற்றி எண்ணற்ற கீர்த்தனைகளை இயற்றி வைத்திருந்தார். பாரதியார் பாடல்களோடு சேர்த்து இந்தக் கீர்த்தனைப் பாடல்களையும் பாடுவதை வழக்கமாகக் கொண்டார் அவர். 'வைஷ்ணவ ஜனதோ' என்னும் பாடல் காந்தியடிகளின் பிரார்த்தனைப் பாடல்களில் மிகமுக்கியமானது. குஜராத்தின் ஆதிகவி என்றும் மக்கள் கவியென்றும் பாராட்டப்படும் நரசிங்க மேத்தா என்பவர் எழுதிய பாடல் இது. சங்கு சுப்பிரமணியம் அப்பாடலை தமிழில் அதே மெட்டில் மொழிபெயர்த்து வெளியிட்டார். கேட்கும்போதே மனத்தை உருக்கும் பாடல் அது. அந்தப் பாடலையும் மேடைதோறும் பாடிப் பரவலாக்கினார் கோதநாயகி.

சொல்லுவம் வைஷ்ணவன் யாரெனக் கேளீர்
சோர்ந்தவர் பீடையை அறிவானே
எல்லோர்தம் துக்கத்தை எரிப்பவனாயினும்
எள்ளளவும் கர்வம் அடையானே

மன்னுயிர் மக்களை வந்தித்து நிற்பான்
மாசுறு நிந்தனை மொழியானே
சொல்மனம் உடலதில் சுத்தம தானவன்
சோதியுற்றான் பெற்ற தாய்மாரே

பாவப் பேராசையற்று பார்வை சமத்துவமுற்று
பரஸ்திரியைத் தாயெனப் பணிவானே
நாவினால் பொய்மொழி நவிலவும் மாட்டான்
நாளும் பிறர்செல்வம் தீண்டானே

மாயையும் மோகமும் மாயும் அவன்பால்
மனத்தில் வைராக்கியம் உறுவானே
ஓயாமல் ராமனை உண்மை நினைந்திட
உண்டு புண்ணியம் உடலதிலே

காமமும் லோபமும் கபடமும் கோபமும்
கனவிலும் இல்லாத கனவானே
பாமரர் பார்த்திட பற்பல தலைமுறை
பாவனம் அடைந்திடச் செய்வானே

கோதைநாயகியின் குரல்வளத்தால் வெகு விரைவில் இப்பாடல் மக்களின் மனத்தில் இடம்பிடித்துவிட்டது. கிட்டத்தட்ட ஒரு தமிழ்ப் பாடலைப்போலவே அது மக்களிடையே புழங்கத் தொடங்கியது.

அச்சமயத்தில் டெல்லி வைசிராய் கவுன்சிலுக்குத் தேர்தல் அறிவிக்கப்பட்டது. அத்தேர்தலில் காங்கிரஸ் சார்பாக சத்தியமூர்த்தி நின்றார். அவர் வெற்றிக்காக தீவிரமான பிரச்சாரத்தில் ஈடுபட்டார் கோதைநாயகி.

மதுப் பழக்கத்திலிருந்து மக்களை மீட்பது காந்தியடிகள் ஒரு கொள்கையாகவே வைத்திருந்தார். காந்தியர்கள் தேசமெங்கும் மதுப்பழக்கத்தின் தீமையை எடுத்துரைத்து பிரச்சாரத்தில் ஈடுபட்டனர். 1931ஆம் ஆண்டில் சென்னையில் அந்தப் பிரச்சாரம் தீவிரமடைந்தது. ஒவ்வொரு கள்ளுக்கடைக்கு முன்னாலும் ஓர் ஆண் தொண்டரும் ஒரு பெண் தொண்டரும் நின்று மறியலில் ஈடுபடவேண்டும் என்பதுதான் திட்டம். கள்ளுக்கடை மறியலென்பது கள்ளருந்த வருகிறவர்களை பணிவுடன் தடுத்து நிறுத்தி, கள்ளினால் வரும் கேடுகளையும் மதுவின் போதையில் மனிதர்கள் மிருகமாக மாறி குடும்பத்தினரை தவிக்க வைப்பதையும் பட்டினி போடுவதையும், நல்ல விதத்தில் எடுத்துரைத்து, அவர்களை கள்ளருந்த செல்லாமல் தடுப்பதாகும். அதையும் மீறிச் செல்ல முனைபவர்களின் கால்களில் விழுந்தாவது தடுத்தல் அவசியம்.

காங்கிரஸ் தொண்டர் ஒருவரும் கோதைநாயகியும் ஒருநாள் ஒரு கள்ளுக்கடையின் முன்னால் மறியல் செய்யச் சென்றிருந்தனர். அந்தக் கடைக்காரர் ஓர் அடாவடிக்காரர். சண்டைகளுக்கு அஞ்சாதவர். ஏற்கனவே ஒரு குற்றத்துக்காகச் சிறைக்கு சென்று தூக்குமேடை வரைக்கும் போய் ஏதோ நல்வாய்ப்பால் பிழைத்து வந்தவர். தன் வியாபாரம் பாதிப்பதை அவரால் பார்த்துக்கொண்டு அமைதியாக இருக்கமுடியவில்லை. ஆத்திரத்தில் கடைக்குள் சென்று துப்பாக்கியை எடுத்துவந்து காட்டி கொன்றுவிடுவதாக அச்சுறுத்தினார். அருகில் நின்றிருந்த பலரும் அதைப் பார்த்து அஞ்சினர். இனிய மொழியும் பரிவும் கொண்ட கோதைநாயகி அப்போதும் அவரைப் பார்த்து கள் விற்பனை செய்யவேண்டாம் என்று மன்றாடிக் கேட்டுக்கொண்டார். நல்ல வேளையாக, அந்த நேரத்தில் காவல்துறையை சேர்ந்த ஓர் அதிகாரி வந்து கள்ளுக்கடைக்காரரை தடுத்து நிறுத்தி காவல்நிலையத்துக்கு அழைத்துச் சென்றுவிட்டனர். கோதைநாயகியின் மீது நிகழவிருந்த தாக்குதல் சரியான நேரத்தில் தடுக்கப்பட்டது.

1932ஆம் ஆண்டில் ஆங்கில அரசு நியமித்த லோதியன் கமிஷன் இந்தியாவுக்கு வந்தது. நாடெங்கும் தொண்டர்கள் ஊர்வலம் சென்று தம் எதிர்ப்பைத் தெரிவித்தார்கள். சென்னையில் நிகழ்ந்த ஊர்வலத்தில் கோதைநாயகி கலந்துகொண்டார். சைனா பஜாரில் உள்ள காதி வஸ்திராயலயத்திலிருந்து ‘வந்தே மாதரம்’ முழக்கத்தோடு ஊர்வலம் புறப்பட்டது. பாரதியார் பாடல்களை உணர்ச்சி பொங்கப் பாடியபடி நடந்து சென்றார், கோதைநாயகி. பாதி வழியில் காவலர்கள் ஊர்வலத்தை தடுத்து நிறுத்தி அனைவரையும் கைது செய்தனர். மறுநாளே விசாரணை முடிந்து கோதைநாயகிக்கு ஆறுமாதம் சிறைத்தண்டனையும் ஐந்நூறு ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டது. கோதைநாயகி வேலூர் சிறையில் அடைக்கப்பட்டார்.

வேலூர் சிறையிலிருந்த கைதிகள் பலரும் பலவித குற்றங்களுக்காக தண்டிக்கப்பட்டிருந்தனர். அவர்கள் நிலைகண்டு இரங்கி, அவர்களோடு அன்புடன் பழகி, அவர்களின் வாழ்க்கையைப் பற்றியும் அவர்கள் குற்றம் செய்ததற்கான சூழல்களையும் விரிவாகக் கேட்டறிந்துகொண்டார். அவருக்குக் கிடைத்த தகவல்களின் அடிப்படையில் சிறையிலேயே, ‘சோதனையின் கொடுமை’ என்னும் நாவலை எழுதிமுடித்தார். அதைத் தொடர்ந்து ‘உத்தமசீலன்’ என மற்றொரு நாவலையும் எழுதினார். சாதிக்கொடுமையை வெளிப்படுத்தும் விதமாக ‘மகிழ்ச்சி உதயம்’ என்னும் நாவலை எழுதிமுடித்தார்.



கோதைநாயகி (உட்கார்ந்திருப்பவர்), தனது சகோதரி மகள் என்.எல். பட்டம்மாளுடன்

சிறையிலிருந்து விடுதலையானதும் காந்தியக் கொள்கைகளான கதர் வளர்ச்சி, மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு, சமூக ஒற்றுமை, சுதேசிப் பிரச்சாரம் ஆகியவற்றை முக்கியத்துவப்படுத்தி தியாகக்கொடி, நளினசேகரன் என்னும் நாவல்களை எழுதி வெளியிட்டார். அதைக்கண்டு வெகுண்ட ஆங்கில அரசு கோதைநாயகியை அழைத்து எச்சரிக்கை செய்தது. அந்த நாவல்களை ஏன் தடைசெய்யக்கூடாது என்று அச்சுறுத்தியது. நல்வாய்ப்பாக, அந்த நாவல்களில் ஆங்கில ஆட்சியைப் பற்றிய நிந்தனைகள் எதுவும் காணப்படாமையால், எச்சரிக்கையோடு அவரை வீட்டுக்கு அனுப்பிவைத்துவிட்டது.

1934ஆம் ஆண்டில் திருநெல்வேலி நகராட்சி தேர்தல் நடைபெற்றது. வழக்கம்போல அப்போது காங்கிரஸ் பிரச்சாரத்துக்காகச் சென்றிருந்தார் கோதைநாயகி. காங்கிரஸ் கட்சிக்குப் பெருகும் ஆதரவைக் கண்டு எதிர்க்கட்சியினர் திகைத்து நின்றனர். கோதைநாயகியின் பிரச்சாரத்தைத் தடுக்கும் வகையில் ஒரு சூழ்ச்சியில் இறங்கினர். திருநெல்வேலியில்



கோதைநாயகி, தனது உறவினர் மகள்களான எம்.ஜே.ரங்கநயகி (உட்கார்ந்திருப்பவர்) மற்றும் ஜாய் ஆகியோருடன்

பிரச்சாரத்தை முடித்துக்கொண்டு நிகழ்ச்சி ஏற்பாட்டாளர்களும் கோதைநாயகியும் திருக்குறுங்குடி என்னும் ஊருக்கு காரில் சென்றுகொண்டிருந்தார்கள். நேரம் இரவு பத்துமணியைக் கடந்துவிட்டது. காட்டுப்பகுதிக்குள் சென்றுகொண்டிருந்த கார் திடீரென நின்றுவிட்டது. "இனி கார் போகாது. கார் பழுதடைந்துவிட்டது" என்று சொல்லிவிட்டு காரை ஓட்டிவந்த காரோட்டி அங்கிருந்து வேகமாக ஓடிச் சென்று இருளில் மறைந்துவிட்டார். என்ன செய்வதெனப் புரியாமல் இருளில் அனைவரும் திகைப்போடும் அச்சத்தோடும் கலங்கி நின்றிருந்தனர். தற்செயலாக அவ்வழியே வந்த ஒரு காரை நிறுத்தி நடந்ததையெல்லாம் சுருக்கமாக எடுத்துரைத்தனர். கார்க்காரர் அவர்களை ஏற்றிச் சென்று திருக்குறுங்குடியில் இறக்கிவிட்டார். அவரும் பிரச்சாரத்தை முடித்துக்கொண்டு சென்னைக்குத் திரும்பிவிட்டார்.

ஒன்றிரண்டு மாதங்களுக்குப் பிறகு சென்னையில் கோதைநாயகியைச் சந்திப்பதற்காக, பாதி வழியில் காரை நிறுத்திவிட்டு ஓடிய காரோட்டி வந்தார். தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டு அந்த நள்ளிரவில் தான் செய்த செயலுக்கு தன்னை மன்னிக்கும்படி கேட்டுக்கொண்டார். அன்று எதிர்க்கட்சியினர் வகுத்தளித்த சூழ்ச்சித் திட்டத்துக்கு பல நெருக்கடிகளின் காரணமாக அந்தச் சதித்திட்டத்துக்கு உடன்பட வேண்டியிருந்ததென்று குற்ற உணர்வோடு சொன்னார். "மலைப்பாதையில் வண்டி செல்லும்போது ஒரு பள்ளத்தை நோக்கி வண்டியைத் திருப்பிவிட்டு நீ மட்டும் வண்டியிலிருந்து குதித்து தப்பிவிடு. அவர்களையும் இழுத்துக்கொண்டுபோய் வண்டி விழுந்து நொறுங்கட்டும்" என்று திட்டம் தீட்டிக் கொடுத்ததாக தெரிவித்தார். அந்த உதவிக்குப் பணம் கொடுப்பதாக ஆசை காட்டியதாகவும் சொன்னார்.

"அன்றைய கூட்டத்தில் உங்கள் பாடலையும் சொற்பொழிவையும் கேட்டேன். அது என் மனத்தை மாற்றிவிட்டது. உங்களைக் கொல்ல எனக்கு மனம் வரவில்லை. உங்களைப் போன்றவர்கள் இந்த நாட்டில் நீடூழி வாழ்ந்து தேசமுன்னேற்றத்துக்குப் பாடுபடவேண்டும் என்று நினைத்தேன். அதனால்தான் வண்டியைப் பள்ளத்தில் விடாமல் ஓரமாக நிறுத்திவிட்டு ஓடிவிட்டேன். ஆனாலும், இருளில் ஒளிந்துநின்று நீங்கள் வழியில் வந்த வாகனத்தில் ஏறிச் செல்வதைப் பார்த்த பிறகுதான் நிம்மதியோடு அங்கிருந்து அகன்றேன்" என்று வணங்கிய கைகளோடு சொன்னார். மேலும் "நான் அவர்களை சந்தித்து நடுவழியில் கார் கெட்டுவிட்டதால் பள்ளத்தில் இறக்கமுடியவில்லை என்று பொய் சொன்னேன். ஆனால், அவர்கள் என் சொற்களை நம்பவில்லை. அந்த ஊரிலேயே இருந்தால் என்னைக் கொன்றுவிடுவார்களோ என்று அச்சமாக இருந்தது. அதனால் ஊரிலிருந்து ஓடிவந்துவிட்டேன். உங்கள் பெயரைச் சொல்லிச்சொல்லி வழிகேட்டுக்கொண்டே இங்கு வந்தேன். நீங்கள்தான் எனக்கு வாழ ஒரு வழியை ஏற்படுத்திக்கொடுக்கவேண்டும்" என்று கண்ணீர் விட்டு அழுதார். அவர் சொற்களைக் கேட்டு மனம் இரங்கிய கோதைநாயகி தனக்குத் தெரிந்த இடத்தில் அவருக்கு காரோட்டி வேலையை வாங்கிக் கொடுத்தார்.

**கா**ந்தியடிகள் *30.01.1948* அன்று சுட்டுக் கொல்லப் பட்டார். அவர் நினைவாக *02.03.1948* அன்று, 'மகாத்மாஜி சேவா சங்கம்' என்னும் பெயரில் ஓர் அமைப்பைத் தொடங்கினார் கோதைநாயகி. அதன்மூலம் ஏழை நோயாளிகளுக்குத் தேவையான மருத்துவ உதவிகளை செய்தார். எண்ணற்ற ஏழைப் பெண்களின் திருமணத்தை முன்னின்று நடத்தினார். ஏழ்மையில் வாடும் சிறுவர், சிறுமியர்களுக்கு படிக்கத் தேவையான நோட்டு புத்தகங்களை வாங்கிக் கொடுத்து படிக்க உதவினார்.

சுதந்திரமடைந்த பிறகு, கோதைநாயகின் சேவைகளையும் தியாகத்தையும் பாராட்டி கௌரவிக்கும் விதமாக, அரசு கோதைநாயகிக்கு பத்து ஏக்கர் நிலத்தை வழங்கியது. ஆனால், அதைத் தனக்கென வைத்துக்கொள்ள விரும்பாத கோதைநாயகி, பூமிதான இயக்கப் பிரச்சாரத்துக்காக வினோபா பாவே தமிழகத்துக்கு வந்தபோது அவரிடம் ஒப்படைத்தார். ●

**பாவண்ணன்**
**<paavannan@hotmail.com>**

# தேவகாந்தனின் நதிமேல் தனித்தலையும் சிறுபுள்



டிசே தமிழன்

பதின்மத்தில் கனடாவுக்கு புலம்பெயர்ந்து பாடசாலையில் ஆங்கிலப் பாடங்களை எடுத்தபோது, வாசிப்பதற்கென சில நாவல்கள் எங்கள் பாடத்திட்டத்தில் இருந்தன. ஒழுங்கான ஆங்கில பரிட்சயமில்லாது அதை வாசிக்கும் கஷ்டம் ஒருபுறம் என்றால், இன்னொருபுறம் என்னைப் போன்ற 'புலம்பெயரி'களுக்கு அந்த நாவலின் சூழல், பாத்திர வார்ப்புக்கள் போன்றவை முற்றுமுழுதாக அந்நியமாக இருந்தன. அதனால், பல நாவல்களை 'சும்மா' எழுந்தமானமாய் விருப்பின்றியே வாசித்திருக்கின்றேன். அன்றைய காலத்தில் வாசித்த Great Gatsby, To Kill a Mockingbird, Lord of the Flies போன்றவை மட்டுமே கொஞ்சம் விதிவிலக்கு.

எனக்குத் தெரிந்த நகரை, எனக்குப் பரிட்சயமான வாழ்வை, என்னைப் போன்ற மண்ணிற மக்களின் கதைகளைச் சொல்பவர்களாக, எம்.ஜி. வாஸன்ஜி, ஷியாம் செல்வதுரை போன்றவர்களை பிறகு கண்டபோது மகிழ்ச்சியாக இருந்தது. என்னைப் போன்றவர்களின் பாத்திரங்கள் இவர்களின் நாவல்களில் இருக்கின்றார்களேயென, அவர்களை நெருக்கமாகவும் நெகிழ்ச்சியாகவும் தொடர்ந்து தேடித்தேடி வாசிக்க எனக்கு முடிந்திருந்தது.

தமிழிலும் முற்று முழுதாகப் புலம்பெயர்ந்த வாழ்வைச் சொன்ன புதினங்கள் என்று பார்த்தால் அரிதாகவே இருக்கும். அதுவும் இலட்சக்கணக்காய் தமிழர்கள் வாழும், நான் வாழும் ரொறொண்டோ நகரின் பின்னணியில் நிகழும் கதைகளைச் சல்லடை போட்டுத்தான் தேடவேண்டியிருக்குக்கும். அப்படி, ஒரு விதிவிலக்கான புதினமாக தேவகாந்தனின் 'நதிமேல் தனித்தலையும் சிறுபுள்' வெளிவந்திருக்கின்றது.

இலங்கையில் ஓரளவு வசதியாக மனைவி மங்கள நாயகியுடனும் மூன்று பிள்ளைகளுடனும் இருக்கும் சிவப்பிரகாசம், குடும்பத்தை நாட்டில் விட்டுவிட்டு கனடாவுக்குப் புலம்பெயர்கின்றார். அவரை காசு கட்டிக் கூப்பிட்ட உறவினர்கள், அவரை சுரண்டுவதைக் கண்டு, உறவுக்காரரின் வீட்டிலிருந்து வெளியேறி, தனியே சென்று வாழத் தொடங்கின்றார். அப்படி இருந்தபடியே மனைவியையும் பிள்ளைகளையும் கனடாவுக்கு ஏஜென்சி மூலம் எடுப்பிக்கின்றார். அவர்கள் சிங்கப்பூரில் கொஞ்சக்காலம் சிக்கிக்கொள்ள, எப்போது அவர்கள் வருவார்களென்ற உற்சாகத்துடன் முதலில் எதிர்பார்த்திருந்த சிவப்பிரகாசம்,இனிஎப்போதாவது வரட்டுமென காலத்தின் மீது பழியைப் போட்டுவிட்டுக் காத்திருக்கின்றார்.

ஒருமாதிரி மங்களமும் அவரின் மூன்று பிள்ளைகளும் கனடாவுக்கு வந்தாலும், அவர்கள், தான் இலங்கையில் விட்டு வந்த குடும்பம் அல்ல என்பது சிவப்பிரகாசத்துக்குப் புரிகிறது. மங்களமும் கனடா வந்த கொஞ்சக் காலத்திலேயே, சிவப்பிரகாசத்தை எல்லாவிடயங்களிலும் முந்திச் செல்கின்றார். சிவப்பிரகாசத்துக்கு இதையெல்லாவற்றையும்விட தனக்கான காமத்தை மனைவி தீர்ப்பதில்லையென்ற பெருங் கவலை இருக்கிறது. மங்களமோ அந்தக் காமத்தைத் துருப்பாகக் கொண்டே சிவப்பிரகாசத்தைமேவி மேவிச் செல்கின்றார். ஒருநாள் காமம் தறிகெட்டலைய, ஒரு முக்கிய விடயத்தைக் காரணங்காட்டி மங்களம் விலகிப்போக, சிவப்பிரகாசம் வன்முறையைப் பாவிக்கின்றார். அது பெருத்து, பிள்ளைகள் பொலிஸை அழைக்க, சிவப்பிரகாசத்தால் வீட்டுக்கு என்றென்றைக்குமாய் திரும்ப முடியாத நிலை ஏற்படுகின்றது.

சிவப்பிரகாசத்துக்குதிரும்பவும் தனிமை வாழ்க்கை. அதன்பிறகு அவர் தன் வாழ்வில் இரண்டு பெண்களை சந்திக்கின்றார். ஒரு பெண்ணோடு அவருக்கு விரும்பிய காமம் கிடைக்கின்றது. ஆனால், அந்தப் பெண்ணின் மகனின் வடிவில் அந்த உறவும் சிதைகின்றது. இன்னொரு பெண்ணோடோ வாசிப்பின் நிமித்தம் நட்புக் கனிந்து, நல்லதொரு உறவு முகிழும் சந்தர்ப்பத்தில், வேறொரு சிக்கல் வருகின்றது.

நாவலில் நதி ஒரு முக்கிய படிமமாக வந்தபடியே இருக்கின்றது. ஸ்காபரோ ரூஜ் நதியின் வரலாறு, கனடாவின் பூர்வீகக் குடிகளிலிருந்து தொடங்கி தற்காலம் வரை விரிவாக விவரித்து சொல்லப்படுகின்றது. நதிகளே இல்லாத இலங்கையின் வறண்ட ஊரிலிருந்து வந்த சிவப்பிரகாசத்துக்கு நதியோடு இருத்தலென்பது பேரனுபவமாக இருக்கிறது.



இந்த நாவலை, சிவப்பிரகாசம் சந்திக்கும் மூன்று பெண்களும், அவர்களினூடாக தன் வாழ்வைத் தரிசிக்கும் சிவப்பிரகாசமும், அவரின் தனிமையும் என்று ஒரு சுருக்கத்துக்காய் சொல்லிக்கொள்ளலாம். சிவப்பிரகாசத்தின் வாழ்வினூடாக ரொறொண்டோ மாநகரில் தமிழரின் 90களுக்குப் பின்பான வாழ்க்கையின் குறுக்குவெட்டை பார்க்கமுடியும்.

சிவப்பிரகாசம் ஒரு பெண்ணோடு போய் வாழ்ந்துவிட்டார் என்பதற்காக முகங்களை திரும்புகின்ற உறவுகளும் நண்பர்களும், அதே சிவப்பிரகாசம் தன் மனைவியின் மீது வன்முறையைப் பிரயோகிக்கும்போது, எவ்விதத் தயக்கமுமின்றி ஏற்றுக்கொள்கின்றார்கள் என்பது நாவலின் சற்று விசித்திரமான பகுதியெனத்தான் சொல்லவேண்டும். ஒருவர் தனக்குப் பிடித்த ஒருவரோடு வாழ்வதற்கு ஏன் முகத்தை இந்த மக்கள் திருப்பிக்கொள்ள வேண்டும்? உண்மையில், அவர் வன்முறையை தன் துணையின் மீது பாவித்திருக்கின்றார் என்பதற்கு அல்லவா முகத்தை சுழித்திருக்க வேண்டும்.

சிவப்பிரகாசம் தன் இயலாத் தன்மைகளை அவ்வப்போது வெளிப்படுத்தினாலும், ஒருபோதும் பிற பெண்களை விளங்கிக்கொள்ள முடியாதவர் போன்றே, நாவலை வாசிக்கும்போது தெரிகிறது. அவர் அந்தக் காலத்தைய மனிதருமல்ல. அவருக்கு மூன்றாவதாக ஒரு பெண்ணோடு உறவு வரும்போது அவர் தனது அறுபதுகளின் மத்தியில் இருக்கின்றார். ஒரு பெண்ணோடு மட்டுமே ஒருவரின் வாழ்க்கை முடிவதில்லையென பிற பெண்களைத் தேடும் (அது பிழையுமல்ல) சிவப்பிரகாசத்துக்கு, பெண்கள் தமது சொந்தக் காலில் சொந்த விருப்பில் எப்போதோ தமது வாழ்வை அமைக்கத் தொடங்கிவிட்டார்கள் என்பதை அறியாதிருப்பது சற்று வியப்பாய்த்தானிருக்கின்றது.

அதுபோலவே தனது காமக்கிறுதிகளை விளங்கிக்கொள்ளவில்லை யென தன் மனைவி மீது வன்முறையைப் பாவிக்கின்ற சிவப்பிரகாசத்துக்கு, இன்னொரு தமிழ்ப் பெண்ணான வின்ஸி, அவரை மொன்றியலில் சிவப்பிரகாசம் சந்திக்கும் முதல் சந்திப்பிலேயே, காமத்தைத் திளைக்கத் திளைக்கக் கொடுக்கின்றவராக இருக்கின்றார். ஆக சிவப்பிரகாசம், அவ்வளவு மீறி வெட்கப்படும், காமமா ச்சீய் என்கின்ற அந்த காலத்தைய ஆசாமியும் அல்லவென வாசகர்க்கு விளங்கிவிடுகின்றது.

அதே சிவப்பிரகாசம், காமத்திலும் காதலிலும் திளைக்க நல்ல வாய்ப்பிருக்கும் கிநாரியை அணுக அல்லது கிநாரி அவரை அணுகுகின்ற போது மட்டும், திருப்பவும் அந்தப் பழைய காலத்து ஆள்போல நடந்து கொள்ளும்போது வாசிக்கும் எங்களுக்கு சற்று பொறுமை யின்மை வருகிறது. வின்ஸிக்கு ஒரு மகன் இருக்கின்றபோதும், அந்த உறவுக்குப் போகத் தயார் நிலையிலேயே சிவப்பிரகாசம் இருக்கின்றார். ஆனால், கிநாரி என்கின்ற இன்னொரு ஆர்மேனியப் பெண்ணுக்கு ஒரு மகள் ஆர்மேனியாவில் இருக்கின்றாள் என்பதை அறியும்போது மட்டும், அவருக்குள் ஒரு விலகலும் தயக்கமும் வந்துவிடுகின்றது ஏன் என்பது எமக்குப் புரிவதில்லை.

இத்தனைக்கும் சிவப்பிரகாசத் துக்கு மூன்று பிள்ளைகள் இருக் கின்றனர். அத்தோடு கிநாரியின் மகள் பதினெட்டு வயதுக்கு அண்மையாக இருப்பவளும், அவளுக்கென்று காதலனை வைத்திருப்பவளும் கூட. அவள் கனடா வந்ததன்பின், தாயோடு இருக்கும் காலம் கொஞ் சமாகவே இருக்கும். மகளைக் காரணங்காட்டி கிநாரியும் சிவப்பிரகாசமும் உரையாடுகின்ற இடமெல்லாம் ஒருவித நாடகீயத் தன்மையாகவே தோன்றுகின்றது. ஏனெனில், 55 வயதிலும் 65 வயதிலும் இருக்கும்போதாவது ஒரு இணை தமது முதுமையைப் பற்றியும், தமக்கான துணைகளைப் பற்றியும் பேசாது, மகளை மட்டுமே முன்னிலைப்படுத்தி தமக்கான உறவுக்குத் தடுப்பாணை

போடுவார்களோ என்றே யோசிக்க முடிகிறது.

நாவலின் இன்னொரு பலவீனமாக, சிவப்பிரகாசம், மனைவி மங்களத்துக்கு அடித்து, வீட்டை விட்டு வெளியேற்றப்பட்டபின், தன் பிள்ளைகளை ஒருபோதும் திரும்பிப் பார்ப்பதேயில்லை. ஒரே நகரத்திலே அவர்களோடு வாழ்ந்தபடி இருக்கும் சிவப்பிரகாசம், தனது பிள்ளைகளைக் கண்டு பேசவேண்டும், பழக வேண்டுமென்று ஒருபோதும் ஆசைப்பட்டிருக்கவே மாட்டாரா? ஸ்காபரோ சிவிக் சென்ரரில் ஒரு இலக்கிய நிகழ்வில் பங்குபெற வரும் சிவப்பிரகாசம், தற்செயலாக அருகிலிருந்த அங்காடிக்குள் தனது வளர்ந்த மகன் ஒரு வெள்ளைப் பெண்ணொடு காதல் செய்கின்றபோதே பார்க்கின்றார். அதற்குப் பிறகு அந்த மகன், அவரின் மூத்த மகளின் திருமண அழைப்பிதழைக் கொடுக்க வரும்போது மட்டுமே சந்திக்கின்றார். மகனை இரண்டு முறை பார்த்தாரென்றால், அவரது மகள்களை ஒருபோதும் திருப்பிப் பார்க்காதவராகவே இந்த புதினத்தில் சொல்லப்படுகின்றது.




எத்தனையோ நூற்றுக்கணக் கான புத்தங்களைச் சேகரத்தில் வைத்து, வாசிப்பில் பெரும் விருப்பு கொண்ட ஒரு மனிதர் தனது பிள்ளைகளிடம்கூட கொஞ்சம் கருணை காட்டாவிட்டால் அவர் இவ்வளவு புத்தகங்களை வாசித்துத்தான் என்ன என்றும் இந்தப் புதினத்தை வாசிக்கும் எமக்கும் தோன்றுகின்றது.

இவ்வாறான சில பலவீனங்கள் நாவலுக்குள் இருந்தாலும், சுவாரசியமாக வாசிக்கும் நடையில் தேவகாந்தன் எழுதிச் சென்றிருப்பதை குறிப்பிட்டாக வேண்டும். அவரின் கடந்த சில நாவல்களைப் போல பல நூற்றுக்கணக்கான பக்கங்களில் எழுதாது, இந்த நாவலை நூறு பக்கங்களில் முடித்திருப்பதும் என்னைப் பொருத்தவரை மகிழ்ச்சியானது.

இந்த நாவல் தனிமையும், ஒரு மனிதரின் 'ஆன்மீக' தேடலும் என்றாலும், அதைவிட கூடத் துருத்திக் கொண்டிருப்பது சிவப்பிரகாசம் என்கின்ற ஆண் தன்னைத்தானே ஒருவகையில் நியாயப்படுத்திக்கொள்கின்ற பனுவல் போலவே தோன்றுகின்றது. அவர் இந்த நாவலில் சந்திக்கும் இரண்டாவது பெண்ணான வின்ஸி தன் மகனுக்காக சிவப்பிரகாசத்தோடான உறவைத் துண்டித்துவிடும்போதாவது, அவருக்கு தனது பிள்ளைகளின் நினைவு வந்திருக்காதா? எங்கேயோ தான் தவறுவிட்டிருக்கின்றேன் என்று கலங்கி யிருக்கமாட்டாரா என்று யோசிக்கத் தோன்றுகின்றது.

நாவலின் இறுதியில் சிவப்பிரகாசத்துக்கு ஒரு தெளிவு வந்து முகங்கூட பிரகாசிப்பதாய் சொல்லப்படுகின்றது. 'எவரது அன்பும் எவரது ஆதரவும் எவரது அரவணைப்பும் அவருக்கு இல்லாமல் போயிருக்கிறது. அது அறுதியான ஒரு தனிமைக்குள் அவரைத் தூக்கி வீசியிருக்கிறது' என்று கூறி, 'ஒரு அனுக்கிரகம் ஒளிவெள்ளம்போல் அவரில் வந்து இறங்குகின்றது. அவர் பயணத்தின் திசையும், திசையின் மய்யமும் ஒரு புள்ளியாய் அவருக்குத் தரிசனமாகின்றன' எனச் சொல்லப்படுகின்றது. சிவப்பிரகாசத்துக்கு ஒரு தரிசனம் கிடைத்திருப்பது நல்லதுதான். அந்தத் தரிசனத்தில் அவர் சந்தித்த பெண்களையும், தனது பிள்ளைகளையும் விளங்கிக்கொள்கின்ற ஒரு பகுதியும் சேர்ந்தே நுழைந்திருந்தால் எவ்வளவு நல்லது போல நமக்கும் தோன்றுகின்றது.

தேவகாந்தனின் புதினங்கள் சிலது தொடக்கத்தில் நன்றாகப் போய்க்கொண்டிருக்கும். ஒரு குதிரையைப் போலத் தன்பாட்டில் போகும் எழுத்தை, பிறகு ஏதோ ஒருபுள்ளியில் சட்டென்று கடிவாளத்தை போட்டு இறுக்கி இழுத்துவிடுகின்றவராய், தேவகாந்தனின் எழுத்தைச் சில இடங்களில் அவதானித்திருக்கின்றேன். எழுத்து எங்கு அழைத்துச் செல்கிறதோ அப்போது கடிவாளத்தை தூர எறிந்துவிட வேண்டியதுதான். அப்போதுதான் நாவல் தன்னளவில் தன்னை எழுதிச் சென்று எல்லைகளை மீறிச்செல்வதாக அமையும். இங்கேயும் தேவகாந்தன் நாவலின் மீது ஏறி கடிவாளத்தை இறுக்குகின்ற பல இடங்கள் இருக்கின்றன.

இவ்வாறான சில தடைகள்/இடைஞ்சல்களைத் தவிர்த்துப் பார்த்தால், புலம்பெயர் வாழ்வை - முக்கியமாய் ரொறொண்டோ மாநகரை - அடையாளப்படுத்தும் நாவல் என்றவகையில் இது முக்கியமானது. கொஞ்சப் பக்கங்களில் இந்த நாவலை முடித்ததாலோ என்னவோ இறுக்கமான நல்ல மொழிநடையும் இந்த நாவலுக்கு வாய்த்திருக்கின்றது. தேவகாந்தனை போல புலம்பெயர்ந்த தேசத்தில், எழுத்தில் இப்படி முழுமையாகக் கரைந்துகொண்டவர்கள் வெகு அரிதே என்பதால் அவர் மீது ஒருவகை மதிப்பிருக்கிறது. அந்த மதிப்பிருப்பதால்தான் இப்போது எழுதிக் கொண்டிருக்கும் நாவல்களைக் கறாராக வாசிக்கவும் வேண்டியிருக்கிறது. ●


**டிசே தமிழன்**

**<elanko@rogers.com>**


---


நதிமேல் தனித்தலையும் சிறுபுள் - தேவகாந்தன்; விலை ரூ. 130; வெளியீடு: நற்றிணை பதிப்பகம்;

தொலைபேசி: +91 44 4864 3208; மின்னஞ்சல்: natrinaipathippagam@gmail.com

# எமிலி டிக்கின்சன் மௌனத்தின் ஒலிக்கீற்று



ஸிந்துஜா



"ஒன்றும் சொல்லாமலிருப்பது, சில சமயங்களில் ஏராளமானவற்றைச் சொல்லி விடுகிறது" - எமிலி டிக்கின்சன்

யாருடனும் அதிகம் பேச்சு வைத்துக்கொள்ளாமல், தன்னைச் சுற்றிய மௌனம் ததும்பிய சூழலில் ஆழப் புதைந்துகொண்டு, அப்படியே சிநேகிதங்கள் கிடைத்தால் அவர்களுடன் கடிதங்களை மட்டும் பரிமாறிக்கொண்டு வாழ்ந்த காலம் வரை, வெளியுலகம் அவரின் பேராற்றலை அறிந்துகொள்ள முடியாத வண்ணம் வாழ்ந்து மறைந்தவர், இன்று உலகெங்கும் கொண்டாடப்படும் கவி எமிலி டிக்கின்சன்.

தனது ஐம்பத்தைந்தாவது வயதில் மறைந்த எமிலி டிக்கின்சன் எழுதிய கவிதைகளின் எண்ணிக்கை 1800க்கும் மேல். ஆனால், அவர் உயிருடன் இருந்த போது அவற்றில் மிகச் சில கவிதைகளே அச்சில் வெளிவந்தன. 1850 முதல் 1878 வரையில் உள்ள இருபத்தெட்டு வருடங்களில் பத்து கவிதைகளும் ஒரு கடிதமும் மட்டுமே பிரசுரமாயின. ஆனால், இவற்றுக்கும் எமிலி பிரசுர உரிமை தரவில்லை. அவை அவருடைய பெயரிலும் வெளிவரவில்லை.

1862இல் எமிலி டிக்கின்சன், அவருக்கு முன்பின் அறிமுகமில்லாத முப்பத்தெட்டு வயது நிரம்பிய தாமஸ் வென்டொர்த் ஹிக்கின்சன் என்னும் எழுத்தாளரும் பாதிரியும் பெண் விடுதலைப் போராளியும் கறுப்பின ஆதரவாளருமாக விளங்கியவருக்கு, ஒரு கடிதம் எழுதினர். அன்று தொடங்கிய நட்பு இருபத்தி நான்கு வருடங்கள் கடிதப் பரிமாற்றம் மூலம் தொடர்ந்தது. (அவர்கள் நேரடியாக சந்தித்துக்கொண்டது இருமுறை மட்டுமே)

ஹிக்கின்சன் இளம் எழுத்தாளர்களுக்கான அறிவுரையை ஒரு சமயம் எழுதினர்: "ஒரே வார்த்தையில் பல வருஷங்கள் அடக்கி வைத்திருந்த உணர்ச்சிப் பிரவாகம் இருக்கக்கூடும். அதேபோல ஒருவரின் பாதி வாழ்நாளை ஒரு வாக்கியம் தன்னுள் அடக்கிக்கொள்ள முடியும்."

இதைப் பார்த்து விட்டு எமிலி எழுதிய முதல் கடிதத்தில், "மிஸ்டர் ஹிக்கின்சன்! நீங்கள் உண்மையிலேயே என் கவிதை வரிகள் உயிர்ப்புடன் இருப்பதாகச் சொல்கிறீர்களா?" என்று கேட்டார்.

எமிலி, ஹிக்கின்சனை ஒரு பாமரரைப் போல அணுகினார். அப்போது அவர் நூற்றுக்கணக்கான கவிதைகளை எழுதியிருந்தார். அவற்றுள் சில கவிதைகள் உலகத்தின் தலைசிறந்த படைப்புகளாக இருந்தன. அவருடைய ஆங்கிலம் முற்றிலும் புதிய தொனியில் விளங்கிற்று. இக்கவிதைகளில் தெறித்த உணர்ச்சிப் பிரவாகம் அதுவரை ஆங்கிலக் கவிதைகள் சந்தித்திராத உலகைக் காண்பித்தது. புழக்கத்தில் இருந்த நைந்துபோன வார்த்தைகளையும் எண்ணங்களையும் எமிலியின் எழுத்து பின்னுக்குத் தள்ளிப்போட்டது.

ரிச்சர்ட் பி. சீவால் என்னும் சுயசரிதை எழுத்தாளர், எமிலியின் வாழ்க்கை வரலாற்றை எழுதியிருக்கும் நூலில் எமிலியை ஜார்ஜ்ஹெர்பர்ட்வேர்ட்ஸ்வொர்த், ஷேக்ஸ்பியர் ஆகியோருடன் ஒப்பிட்டிருந்தார்.

எமிலிக்குத்தன் கவிதைகள் பற்றிய திடமான அபிப்பிராயங்கள் இருந்தன. அவைகளைக் கட்டித் தனது அறையில் இருந்த பீரோவில் அடுக்கி வைத்திருந்தார். தன் கவிதைகளை பற்றித் தனக்கு நெருக்கமாயிருந்தவர்களுடன் மட்டுமே பரிமாறிக்கொண்டார். அவர்களுள் அவரது அந்தரங்க சிநேகிதியும் சகோதரனின் மனைவியுமான சூசன் ஹெர்பர்ட், 'ஸ்பிரிங்ஃபீல்டு ரிபப்ளிகன்' இதழின் ஆசிரியர் சாமுவேல் பவுல்ஸ் ஆகியோர் அடக்கம்.

பவுல்ஸ் எமிலியின் பெயரை வெளியிடாமலேயே தனது பத்திரிகையில் வெளியிட்டிருந்த எமிலியின் மூன்று கவிதைகளில் ஒன்றான கீழ்க்கண்ட கவிதையை ஹிக்கின்சனுக்கு எமிலி அனுப்பினார்:

காலையால் வருடப்படாது -
மதியத்தால் தொடப்படாது -
உறங்குகின்றன
உயிர்த்தெழுதலை நம்பி.
மென்பட்டுக் கூரையும் - கற்கூரையும்
தழுவி நிற்க.
அவற்றுக்கு மேலே -
கடந்து செல்லும் வருடங்கள்.
உலகங்களின் வளைவுகளாக
வான் மண்டலங்கள் -
கிரீடங்கள் - வீழ்கின்றன -
பிரபுக்களின் சரண் -
பனி படர்ந்த வட்டத் தகட்டின்
நிசப்தமான புள்ளிகள்.

எமிலியின் கவிதைகளில் காணப்பட்ட திறமையையும் தனித்தன்மையையும் கண்ட ஹிக்கின்சன், இக்கவிதைகளை சாதாரண ஜனத்தால், அவை உள்ள வடிவத்தில் அனுபவிக்க முடியாது என்று நினைத்தார். ஆகவே, அவர் எமிலியின் எழுத்துக்கள் உடனடிப் பிரசுரம் பெற விரும்பவில்லை.

ஹிக்கின்சனுக்கு எழுதிய கடிதத்தில் எமிலி, அவர் தனக்கு 'நம்பிக்கைத் துரோகம்' செய்துவிட வேண்டாம் என்று எழுதினார். அம்மாதிரி எதுவும் ஹிக்கின்சன் செய்யவில்லை. என்றாலும் பவுல்சும் மற்ற விமர்சகர்களும் அவர் எமிலியின் கவிதைகளை உடனடியாகப் பிரசுரம் செய்ய வேண்டாம் என்று சொல்லியிருக்கக் கூடாது என்று நினைத்தார்கள்.



எமிலி டிக்கின்சன் பிறந்த வீடு. இங்குதான் அவரது பெரும்பான்மையான கவிதைகளையும் எழுதியுள்ளார்.

எமிலி 1883இல் அவருடைய நான்கு கவிதைகளை நெருங்கிய நண்பர்களுக்கு அனுப்பினார். அவை சிறு புத்தகமாகத் தொகுக்கப்பட்டு பல வீடுகளில் தரப்பட்டன. அவரது கவிதைகளின் பேசுபொருள் - நம்பிக்கை, சத்தியம் மற்றும் சாவு பற்றி இருந்தன. மரபை எதிர்த்து எழுதப்பட்ட எமிலியின் கவிதைகள் தம் வார்த்தைகளில் பூடகமாக ஒளித்து வைத்திருந்த அர்த்தத்தை ஒரு வாசகர் பரிபூர்ணமாக உணர எளிதான வழி என்று எதுவும் இருக்கவில்லை. அவருடைய எழுத்துக்களில் பாய்ந்தோடிய நிறுத்தக் குறிகள், குறுக்கும் நெடுக்குமாய்ச் சென்ற கோடுகள், இடைவெளிகள் ஆகியவற்றை ஆரம்ப காலப் பதிப்பாளர்கள் - பெரும்பாலும் பத்திரிகைகள் - ஒதுக்கிவிட்டுப் பிரசுரம் செய்தார்கள். பின்னாட்களில் இக் கவிதைகளை ஊன்றிப் படித்த விமரிசகர்களும் ஆராய்ச்சியாளர்களும் இத்தகைய நிறுத்தக் குறிகள், கவிதைகளில் உள்ள இசையையும், ஆழ்ந்த அர்த்தங்களையும் விளக்குவதற்காக எமிலியால் இடப்பட்டதாகக் கருத்துத் தெரிவித்தார்கள். மதம் மற்றுமின்றி, சமூக அவலங்களுக்கும் எதிராக எமிலி டிக்கின்சனின் கவிதைகள் எழுந்தன. முப்பது வயது வரை சர்ச்சுக்குப் போய்க் கொண்டிருந்த எமிலி, பிறகு தன்னைப் புறச்சமயி (Pagan) என்று அழைத்துக்கொண்டார். மதத்தைவிட விஞ்ஞானம் புதுமைகள் நிரம்பியது, வழிகாட்டுவது, மரியாதைக்குரியது என்று குரலுயர்த்தினார்.

ஒரு கவிதை இவ்வாறு போகிறது:

பைபிள் ஒரு புராதனப் பொருள்.
மங்கிய மனிதர்களால் எழுதப்பட்டது.
மாயத்தோற்றமுடைய
புனிதர்களின் யோசனைக்கிணங்கி

இன்னொரு இடத்தில்:

எனக்கு மிகவும் விருப்பமானவற்றில்
இவ்வுலகமும் ஒன்று.
இதைக் கிறிஸ்துவுக்குத் தர விருப்பமில்லை.
நான் இறக்க வேண்டும் என்று
விதிக்கப்பட்டாலும் கூட.



ஹிக்கின்சன்

அவரது புகழ்பெற்ற குட்டிக் கவிதையான ‘இறை நம்பிக்கை’யில் கூறுகிறார்:

இறை நம்பிக்கை மிகச் சிறந்த கண்டுபிடிப்பு.
நல்லோர் கூறுவது போல்.
ஆனால், நெருக்கடியைப் போக்க
மைக்ரோஸ்கோப்தான்
தேவை.

எமிலி டிக்கின்சனின் கவிதை உலகை ஆழ்ந்து ஸ்பரிசிக்க விரும்பும் ஒருவருக்கு எமிலியின் கவிதைகள் மனப்பாடமாகத் தெரிந்திருக்க வேண்டும். அக்கவிதைகள் எழுப்பும் ஆழ்ந்த இசையைக் கேட்கும் திறன் வாய்ந்த செவிகளைப் பெற்றிருக்க வேண்டும். எமிலியைப் போலவே அந்த வாசகருக்கும் பைபிள் அத்துப்படியாகி இருக்க வேண்டும். ஆங்கில இலக்கியத்தில் வேரூன்றி நிற்கும் கவிதைகளின் சரித்திரம் பற்றித் தெரிந்திருக்க வேண்டும் என்று பல விமரிசகர்கள் உறுதியாக நம்பினார்கள்.

எமிலியின் சகோதரன் ஆஸ்டினுக்கு 1883இல் மேபெல் டாட் என்னும் பெண்ணுடன் பழக்கம் ஏற்பட்டது. நாளடைவில் எமிலியும் மேபல் டாட்டும் கடிதங்களைப் பரிமாறிக்கொண்டு சிறந்த சிநேகிதிகளாக ஆகிவிட்டார்கள். அழகும் இளமையும் திறமையும் வாய்ந்த மேபல் டாட், ஆமெர்ஸ்ட் கல்லூரிப் பேராசிரியர் ஒருவரின் மனைவியாக இருந்தாலும், அவள் ஆஸ்டினுடன் உறவு கொண்டிருந்தாள்.

எமிலி 1886இல் இறந்த போது அவரது சகோதரியான லாவினியா எமிலி விரும்பியபடியே அவரது கவிதைகளை எரித்துவிடப் போவதாகக் கூறினாள். ஆனால், எமிலியின் கவிதைகளின் எண்ணிக்கை 1800 என்று அறிய வந்ததும் அவற்றை வெளியுலகத்தை கவனத்துக்குக் கொண்டு வரவேண்டும் என்று தீர்மானித்தாள். அதற்காக அவள் மேபெல் டாட்டை அணுகினாள்.

மேபெல் டாட் முதன்முதலாகக் கவிதைகளைப் பார்க்க ஆரம்பித்த போது எமிலியின் கையெழுத்தைப் புரிந்துகொள்ளவே பிரம்மப் பிரயத்தனப்பட வேண்டியிருந்தது. ஒரு கவிதையில் தெரிவிக்க வேண்டிய கருத்துக்காக ஆறு முதல் எட்டு வார்த்தைகளை எமிலி எழுதியதுடன், பக்க ஓரங்களில் குறிப்புகளும் எழுதித் தன் சிந்தனையைத் தெளிவாக்கிக்கொள்ள முயற்சித்திருந்தார். இதைப் பற்றி ‘ஹார்ப்பர்ஸ் மேகசினில்’ எழுதும் போது, மேபெல், “பிரதியைக் காப்பி செய்தவற்றில் வார்த்தையை ஒட்டி அடிக்கோடுகள் இடப்பட்டு அவை பக்கத்தின் கடைசியில் உள்ள குறிப்பிட்ட வார்த்தைகளுடன் ஒப்பிட வேண்டிய அவசியத்தை உண்டாக்கின. எமிலியின் மனதுடன் பிரயாணம் செய்யத் தயாராயிருக்கும் ஒருவரால்தான் ஒரு கவிதைக்குள் இயங்க வேண்டிய வார்த்தைகளைத் தெரிவு செய்ய முடியும்” என்று குறிப்பிட்டிருந்தார்.

எமிலியின் கவிதைகள் அடங்கிய ஒரு பெரிய கோப்பை ஹிக்கின்சனிடம் மேபெல் கொடுத்த போது அவர் அதைப் பார்த்துவிட்டு ஒரு தொகுதியை உருவாக்க முடியுமா என்று யோசித்தார். ஏனென்றால், கவிதையின் உருவம் பின்னமுற்றது போலக் காட்சியளித்தது.

சாதாரண ரசிகர்களால் இக்கவிதைகளை ரசிக்க முடியுமா என்று அவருக்குத் தயக்கம் ஏற்பட்டது. ஆனால், மேபெலின் முயற்சியால் தெரிவு செய்யப்பட பல கவிதைகளில் சிலவற்றைப் படித்ததும் அவரால் பிரமிப்பை அடக்கிக்கொள்ள முடியவில்லை. இம்மாதிரி கவிதைகளை எழுதிய மேதைமை குறித்து அவருக்கு மிகுந்த வியப்பு ஏற்பட்டது. சில கவிதைகளை மேபெல் அவருக்கு இசையின் ஏற்ற இறக்கத்துடன் படித்துக் காண்பித்தார்.

இருவரும் சேர்ந்து எமிலியின் கவிதைகளை மூன்று பிரிவாகப் பிரித்தார்கள்: 1. கருத்துக்களை மிகச் சிறந்த உருவத்துடன் வெளிப்படுத்திய அசலான கவிதைகள்; 2. புத்தம் புதிய, திகைக்க வைக்கும் எண்ணங்களில் பிறந்த, ஆனால், எமிலியின் வித்தியாசமான கட்டுணர்வினால் எளிதாகப் புரிந்தகொள்ளப்பட முடியாதவை; 3. நுணுக்கமான, ஆனால், எப்போதும் ஒரு மூடு மந்திரம் போல் சொற்களில் இறுக்கப்படுத்தப்பட்ட அர்த்தங்களினால், சில சமயம் தெளிவற்றதோ என சந்தேகத்தை எழுப்புபவை.

இந்தப் பாகுபாடுகளைப் பிரித்தறிந்து செயல்படுமாறு, ஹிக்கின்சன் தன்னிடம் தள்ளிவிட்டது அவருக்கு எமிலியின் கவிதைகள் மீது அவநம்பிக்கை இருந்ததினாலோ என்று, மேபெல் நினைத்தாள். ஆனால், எடுத்த காரியத்தில் சற்றும் பின்வாங்காது, நாட்கணக்கில் கொஞ்சமும் சோர்வின்றி அசுரத்தனமாக வேலை செய்து, இம்மூன்று பிரிவுகளில் எமிலியின் கவிதைகளைப் பொறுக்கி எடுத்து ஹிக்கின்சனிடம் மேபெல் கொண்டு சேர்த்தார். ஒரே வாரத்தில் மேபெல்லிடம் திரும்பி வந்த ஹிக்கின்சன், “எனக்கு மூச்சு முட்டும் போலிருக்கிறது! என்ன மாதிரியான உன்னதக் கவிதைகள் இவை! இக்கவிதைகளின் உட்பொருளும் அவற்றின் உருவமும் இதுவரை நான் சந்தித்திராதவை” என்று உணர்ச்சி வசப்பட்டார். கவிதைகளைத் தொகுக்கும் போது இருவரும் அவைகளை உள்ளடக்கத்தின் மூலம் வகைப்படுத்தினார்கள்: முதலாவது வாழ்வைப் பற்றி, அடுத்து இயற்கை, அதன் பிறகு காலம், இறப்பு, கடைசியாக நித்தியத்தன்மை என்று.

எமிலியின் கவிதைகளில் வார்த்தைகளை மாற்றியதோடல்லாமல்,



மேபெல்

அவைகள் வரிகளாகப் பதிவிடப்படுகையில் ஒரு வித இசை நயத்தைக் கொண்டு வருவது போலவும் எமிலியின் கவிதைகளை ஹிக்கின்சனும் மேபெல்லும் மேம்படுத்தினார்கள். 'இலக்கணச் சுத்தமாயில்லாத' எமிலியின் கவிதைகளை சீர்படுத்துவது பெரும் பாடாயிருந்தது அவர்களுக்கு. சில இடங்களை 'அவன் - அவனது', 'அவள் - அவளது' ஆகவும் மாற்றினார்கள். பிற்காலத்தில் இவற்றைப் பற்றி ஆராய்ந்த நவீன விமரிசகர்கள் எமிலியின் இலக்கணம் அவர் காலத்திய பேச்சு வழக்குக்கு இயைந்த மாதிரி எமிலியால் உருவாக்கப்பட்டிருக்க வேண்டும் என்று கருதினார்கள்.

அதில் மேபெல்லும் ஹிக்கின்சனும் 'கை' வைத்திருக்க வேண்டியதில்லை என்றும் கருத்துத் தெரிவித்தார்கள்.

எமிலியின் பெயரிடப்படாத பல கவிதைகளுக்கு ஹிக்கின்சனும் மேபெல்லும் தலைப்புகளைத் தந்தது பெரும் கண்டனத்துக்கு உள்ளாயிற்று. எமிலியின் கவிதைகளில் பெரும்பாலும் அச்சில் ஏறாதவை. அவை பிரசுரத்துக்கு அனுப்பப்படாததால் எமிலி தனது கவிதைகளுக்குத் தலைப்பே தரவில்லை. தலைப்பு தரும் மரபை மறுத்தும் அவர் எழுதினர் என்று கருதப்பட்டது. தலைப்புகள் கவிதையைப் பற்றிய முன் அபிப்பிராயத்தை எழுப்புவதையும் அவர் தவிர்க்க விரும்பினார். ஒரு கட்டத்தில் மேபெல்லும் ஹிக்கின்சன் தந்த பல தலைப்புகளை ஒப்புக்கொள்ள மறுத்தார்.

அன்றொரு நாள்
நான் என் உலகை -
இழந்தேன்.
யாராவது அதைப்
பார்த்தீர்களா?

தலைப்பிடாத இந்தக் கவிதைக்கு ஹிக்கின்சன் 'இழக்கப்பட்ட உலகம் என்ற தலைப்பைத் தந்தது, கவிதையின் உயிரோட்டத்தைச் சிதைத்துவிட்டது என்று மேபெல் குறிப்பிட்டார்.

தொகுப்புகளை கொண்டு வந்த இருவர் மீதும் எமிலியின் கவிதைகள் மீது 'கை' வைத்துவிட்டதாகப் புகார்கள் கிளம்பின. அவர்கள் எமிலியின் வார்த்தைகளை மாற்றியதாக, புள்ளி, கமா ஆகியவற்றை எடுத்துவிட்டதாக, தாமாகவே தலைப்புகள் தந்துவிட்டதாக புகார்கள் கிளம்பி மிகுந்த இரைச்சலை எழுப்பின. எப்படியிருந்தாலும் இவ்விருவரும் மனப்பூர்வமான ஈடுபாட்டுடன் எமிலியின் கவிதைகள் அனைத்தையும் தொகுத்ததற்காக இவ்வுலகம் எப்போதும் கடன்பட்டிருக்கிறது.

எமிலியின் இருபதாவது பிறந்த நாளுக்கு நான்கு மாதங்கள் முன்பு சூசன் கில்பர்ட் என்னும் இளம் பெண் எமிலியின் வாழ்க்கையில் குறுக்கிட்டாள். அதன் பின் எமிலியின் வாழ்க்கை முழுவதும் அவருடைய வழிகாட்டியாக, அவருடைய உத்வேகமாக, முதல் வாசகராக, 'தன்னுடைய ஒரே பெண்மணி' என்று எமிலி கூறுமளவுக்கு இணை பிரியாத நெருங்கிய தோழியாகிவிட்டாள். எமிலியும் அவளது சகோதரன் ஆஸ்டினும் விரும்பிய சூசன் ஒரு முக்கோணத்தின் உயிர்முனைப் புள்ளியாக விளங்கினாள். எமிலியின் சூசன் மீதான அன்பு வெறும் மோகமல்ல. இருபது வருடம் இருவரும் நெருங்கிப் பழகிய பின்னர் சூசனைப் பற்றி எமிலி எழுதும் போது,

எனக்குள்ளே முளைத்தெழுந்து
என்னை ஆட்கொள்ளும் சூசன்
என் வாழ்வின் பேரின்பம்.
எந்தவித உலகை நான் துறந்தாலும்
கடவுளே
இதுமட்டும் என்னோடு இருக்கட்டும்

என்று கூறுகிறார்.

அவர்கள் இருவரும் மாலைப்பொழுதுகளில் சேர்ந்து நடந்து சென்றார்கள். புத்தகங்களைப் பரிமாறிக்கொண்டார்கள். ஒருவருக்கொருவர் கவிதை வாசித்துக் காண்பித்துக் கொண்டார்கள். சூசனிடம் ஒரு முறை எமிலி, "நாமிருவரும்தான் கவிகள். மற்றவரெல்லாம் உரைநடைகள்!" என்றார். ஒரு ஞாயிற்றுக்கிழமை சூசனுக்கு,

வா -
இன்று காலை நம் மனங்களுக்குள் இருக்கும்
தேவாலயத்துக்குச் செல்வோம்.
அங்குள்ள மணிகள் ஒலிக்கட்டும்.
காதல் என்று பெயர் பூண்ட பாதிரியார்
நம்மை ஆசிர்வதிக்கட்டும்

என்று கவிதை எழுதி அனுப்பினார். சூசனுக்கும் எமிலிக்கும் இடையே முன்னூறு கடிதங்கள் பரிமாறிக் கொள்ளப்பட்டன.

சூசனுக்கும் எமிலிக்கும் இருந்த ஆழ்ந்த நட்பை சமீபத்தில் வெளியான 'ஒயில்ட் நைட்ஸ் வித் எமிலி' என்ற திரைப்படம் பாலியல் ரீதியாகக் கணித்து பலரையும் திகைக்க வைத்துள்ளது. திரைப்படக் கதையை எழுதி இயக்கிய

மேடலின் ஆல்னெக், "உலகெங்கும் எமிலியின் கடிதங்களையும் கவிதைகளையும் படித்த வாசகர்கள் எமிலியின் பெண்பால் உறவு பற்றி அறிந்தவர்களாகத்தான் இருக்கிறார்கள்" என்றார்.

எமிலியின் மரணத்திற்குப் பிறகு பெரும்பாலான கவிதைகள் மேபெல்லின் வசம் இருந்தன. மீதமிருந்தவை சூசனின் மகளான மார்த்தாவிடம் இருந்தன. எமிலியின் கவிதைகளின் உரிமை பற்றி இரு குடும்பங்களுக்கும் பகைமை இருந்தது. என்றாலும், இறுதியில் மார்த்தாவின் மரணத்துக்குப் பிறகு அவளுடைய நண்பனான ஆல்ஃப்ரெட் ஹாம்ப்சன் என்பவரின் கைக்கு வந்தது. ஆல்ஃப்ரெட் 1950இல் எமிலியின் கவிதைகளுக்கான அனைத்து உரிமைகளையும் ஹார்வர்ட் பல்கலைக்கழகத்துக்கு விற்றுவிட்டார். இன்று எமிலியின் கவிதைகளுக்கான முழு உரிமை இந்தப் பல்கலைக்கழகம் வசம் உள்ளது.

அவர் எழுத்துக்களை ஹார்வர்ட் பல்கலைக் கழகத்துக்குத் தந்து உதவிய போது, எமிலி படித்த ஆமெர்ஸ்ட் கல்லூரி எமிலியின் கவிதைகள் உலக மக்களிடம் இலவசமாகச் சென்றடைய வேண்டும் என்று கோரியது. ஆனால், எமிலியின் கவிதைகளைக் கணினியில் சேமித்து சந்தா செலுத்துபவர்கள் / பணம் கட்டுபவர்கள் மட்டுமே அவற்றைத் தீண்ட முடியும் என்று ஹார்வர்ட் நிர்ணயித்துவிட்டது.

பணம், புகழ், பெயர் ஆகியவற்றில் சிறிதும் நாட்டமில்லாத - அதனாலேயே வெளி உலகின் கவனத்தைத் தவிர்த்த - எமிலி டிக்கின்சனைத்தான் ஆத்ம திருப்திக்காக எழுதியவர் என்று கூற வேண்டும். ●

ஸிந்துஜா <weenvy@gmail.com>

# மந்து



வெள் உவன்
ஓவியம்: பிரியா ஆனந்த்

அந்த முற்றிய காலைக்கும் துளிர்க்கும் மதியத்திற்கும் இடையேயான வேளை அழுத்தமான இருட்டை கொண்டிருந்ததால் கங்குல் வேளையின் தோற்றத்தைப் பெற்றிருந்தது. கத்தும் கடலின் மொத்த நீரையும் உறிஞ்சிக் குடித்தது போல், சூலிப் பெண்ணின் வயிறாய் பருத்து கருத்து நகர்ந்து கொண்டிருந்த கார்மேகங்களின் கைங்கரியம்தான் இந்த அகால இருட்டு. அழுத்தமான இறுக்கமான இந்த பொழுது மிக எளிமையாக மழையைக் கொண்டுவந்து கொண்டிருக்கிறது. பஞ்சுத் துகள்கள் போலல்லாமல் கல்மழை போல் நீர் மழை கனத்து பொழியத் தொடங்கியது.

சாலையில் சென்று கொண்டிருந்த மக்களை பதட்டமடைய வைத்த மழை பதுங்கு குழியைத் தேட வைத்தது. பேருந்து நிறுத்த நிழற்குடை, அடர்ந்த மரத்தடி, திறந்திருந்த கடைகளின் முன் சாய்வு என்று மக்கள் தஞ்சம் புகுந்தனர். பகட்டாக ஒளிர்ந்து கொண்டிருந்த அந்த உணவு விடுதியின் உள்ளேயும் மழையிலிருந்துத் தப்பிக்க சிலர் நுழைந்தனர்.

அந்த உணவு விடுதியில்தான் நாராயணன், தன் மனைவி தமிழ்ச்செல்வி மற்றும் மகள் வெண்மதியுடன், அந்த மேசையின் முன் இருந்த இருக்கையில் அமர்ந்திருந்தார். ‘என்ன சாப்பிடுறீங்க’ என்று இரண்டு முறை கேட்ட சர்வர், ‘கொஞ்சம் இருப்பா நண்பர் வரணும் வரட்டும்’ என்ற நாராயணனின் பதிலில் நகர்ந்து சென்றார்.

நட்சத்திர ஓட்டலின் ஆடம்பரமும் நடைபாதை ஓரத்துத் தட்டுக்கடைப் பதார்த்தத்தின் இனிய மணமும் கலந்தது போன்றதொரு விசித்திரக் கலவையில் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருந்தது அந்த உணவு விடுதி. கல்லாவுக்குப் பின்னே ஆரஞ்சு வண்ண சுவற்றில் அஞ்சுக்கு மூன்று அளவில் திருப்பதி வெங்கடாசலபதி பூரண அலங்காரத்துடன் தொங்கிக் கொண்டிருந்தார். கூடவே வெங்கடாசலபதிக்கு அணியப்பட்டிருந்த மஞ்சளும் சிவப்புமான மலர்களை அடுத்து அடுத்து வசீகரமான அழகியலோடு தொடுத்து இருந்த கனத்த மாலையும்.

நாராயணன் அதிகாரமிக்க பதவியில் இருக்கும் அரசு ஊழியர். இளம் வயதிலேயே பகுத்தறிவு, கடவுள் மறுப்பு என்று கொள்கைப் பிடிப்புள்ள கறார் பேர்வழி. அவர் மனைவியும் அப்படியே வளர்த்த குடும்பத்தில் இருந்து வந்தவர்தான். இப்போது இந்த உணவு விடுதிக்கு அவர்கள் வந்து காத்திருப்பது தங்கள் மகளுக்கு மணமகன் தேடுவதன் ஒரு அங்கம்தான்.

இதிலும்கூட அவர்களின் பகுத்தறிவு மனமே வேலை செய்கிறது. மரபான பெண் பார்த்தல், வரன் தேடுதல் போன்றவற்றை மீற வேண்டும் என்ற உள்ளுணர்வின் விளைவுதான் இதுவும். முக்கியமாக சாதி மறுத்தல் அவர்களுக்கு முதன்மையாக இருந்தது. இதற்கு ஏற்றார்போல் அவர்களின் நண்பர் அறிவழகன் குடும்பமும் இதைப்போன்ற எண்ணத்துடன் இருப்பதை அறிந்து, அறிவழகன் மகன் செழியனை மாப்பிள்ளை ஆக்கிக்கொள்ள நாராயணனும் அவர் மனைவியும் முடிவு செய்தனர். இதற்கு வெண்மதியும் சம்மதம் தெரிவித்தாள். அதன் பின் நண்பர் அறிவழகனிடம் நாராயணன் தனது என எண்ணத்தை சொல்ல அறிவழகன் தன் மனைவி மகனுடன் இந்த உணவு விடுதியில் சந்திப்பதாக முடிவு செய்யப்பட்டதன் விளைவே நாராயணன் குடும்பத்தினரின் இந்த காத்திருப்பு.

கூடுதல் நேரக் காத்திருப்பில் கொஞ்சம் சலிப்பு ஏற்பட்ட நாராயணன் அந்த உணவு விடுதியை சுற்றி ஒரு கண்ணோட்டம் விட்டார். கல்லாவின் பின்னே அட்டகாசமாக தொங்கிக்கொண்டிருந்த வெங்கடாசலபதியின் படம் அவர் கண்ணை உறுத்தியது. ‘இந்தப் படத்திற்கு இவ்வளவு பெரிய மாலையை போட்டு பணத்தை வீணடிக்கும் இவர்களுக்கு பகுத்தறிவு என்பதும் கொஞ்சமும் கிடையாதா?’ என்பதான தனது விமர்சனத்தை மனைவியிடமும் பகிர்ந்துகொண்டார். அவர் சொல்லுவதை ஆமோதிப்பது போல் குறுஞ்சிரிப்புடன் தலையை மெதுவாக ஆட்டிக்கொண்டார் மனைவி.

கிணி கிணி என்று மணி சப்தம் கேட்க, என்னவென்று பார்க்க நாராயணனும் அவர் மனைவியும் மணி சத்தம் கேட்ட திக்கில் கவனத்தை திருப்ப, க்ஷநடுத்தர வயதுள்ள தட்டிகமான ஆள் ஒருவர் வெங்கடாசலபதி படத்திற்கு மணி அடித்தபடியே தீபாராதனை கட்டிக்கொண்டிருந்தார். நாராயணன் எதையோ முணுமுணுத்தபடி மனைவி பக்கம்



திரும்பியவர், மனைவி அனிச்சையாய் தனது வலது கையால் கன்னத்தில் போட்டுக்கொண்டதை கண்டு திடுக்கிட்டார்.

"என்ன செய்கிறாய் நீ?"

அனிச்சையான தனது செயலால் கேள்வி கேட்ட கணவருக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் தடுமாறினார் மனைவி. இப்போது அவர்களின் இந்தக் காத்திருப்பு ஒரு பெண் பார்க்கும் நிகழ்வுதான்.

செழியன் மத்திய அரசில் ஒரு பொறுப்பான அதிகாரியாய் பணிபுரிந்துவரும் முற்போக்கு சிந்தனை கொண்ட இளைஞன்தான். மரபுகள் மீது வெறுப்போடு வளர்ந்தவன்தான். எனவே, உணவு விடுதி சந்திப்பிற்குப் பின் இரு குடும்பத்தாரும் கலந்து எடுத்த முடிவின்படி செழியன் - வெண்மதி திருமணம், அதாவது அவர்கள் மொழியில் சொன்னால், வாழ்க்கை ஒப்பந்த விழா அதற்கே உரிய தன்மையுடன் சிறப்பாக நடந்தேறியது.

வெண்மதி, நாராயணனின் ஒரே மகள் என்பதனால் மகளும் மருமகனும் அவர்களுடனே இருந்து வருவது என்று முடிவு செய்யப்பட்டது. வெண்மதியின் கணவன் செழியனும் அதே ஊரில் பணியாற்றிவந்ததால்இந்தமுடிவை எந்த சிரமமுமின்றி நிறைவேற்ற முடிந்தது.

ஆனால், பத்து ஆண்டுகள் கழிந்தும் செழியன் - வெண்மதி தம்பதியருக்கு குழந்தை பேறு இல்லாமல் இருந்து வந்தது. அவர்கள் முற்போக்கு சிந்தனையால், அக்கம்பக்கத்தார் சொல்லுகிற பரிகாரங்களை

எதையும் ஏற்றுக்கொள்ளாமல், பிள்ளை பேற்றுக்கான சிகிச்சையை மேற்கொண்டு வந்தனர்.

பெண் மருத்துவரின் அறையின் முன்னே இருந்த இருக்கையில் அம்மாவுடன் அமர்ந்திருந்தாள் வெண்மதி. இந்தப் பத்து ஆண்டுகளில், மனதில் ஒரு இனம் புரியாத பதட்டத்துடன், இதுபோல் இந்த இருக்கையில் எத்தனை முறை அமர்ந்துருக்கிறாள். திருமணமாகி பத்து ஆண்டுகள் ஆகியும் கைகூடாத ஆசைக்காய் எத்தனை முயற்சிகள், எத்தனை வகை பிரயத்தனங்கள். அதே அளவிற்குத் தோல்விகள். இவை கொடுத்த மன அழுத்தங்கள் மட்டுமல்லாமல் சுற்றியிருக்கும் சொந்தங்கள், நண்பர்கள் என்று அத்தனை பேருடைய கேள்விகள், விசாரிப்புகள் கொடுத்த அழுத்தங்கள் கணக்கிட முடியாதவை.

செழியன் சந்திக்கிற எல்லா பிரச்சினைகளையும் தெளிவான சிந்தனைகளுடனும் ஆழமான விவாதங்களுடன் அணுகி சமாளிக்கும் திறன் உடையவன்தான் என்றாலும், அவனையே இந்த குழந்தைப்பேறு இன்மை என்பது சற்று கலங்க அடிக்க செய்கிறதே என்ற வருத்தமும்கூட வெண்மதியின் மன அழுத்தத்தைக் கூட்டியது. ஏதேதோ எண்ணங்கள் மனதில் ஓட, பலமுறை கேட்ட எதிர்மறை சோதனை முடிவுகளின் காட்சிதான் கண்ணுக்குள் வந்துவந்து போய்க் கொண்டிருந்தது.

வெண்மதிக்கு. மற்றுமொரு முறை தள்ளிப் போயிருந்ததால் இன்றைய இந்த ரத்தப் பரிசோதனை. ஒவ்வொரு முறையும் மருத்துவர் அறையின் திரைச்சீலையை விலக்கி யாரையோ அழைக்கும் செவிலிப் பெண்ணின் தலையை காணும்போதும் மனம் கொஞ்சம் திடுக்கிட செய்தது. இந்த முறை செவிலிப்பெண் தலை நீட்டி உச்சரித்தப் பெயர் வெண்மதி. தன் பெய்ரை செவிலிப் பெண் உச்சரித்து முடிப்பதற்குள் எழுந்து தாயுடன் கொஞ்சம் படப்படப்புடனே மருத்துவர் அறைக்குள் நுழைந்தாள் வெண்மதி.

மருத்துவர் மேசையின் முன், இருக்கையின் நுனியில் இனம் புரியாதத் தவிப்புடன் அமர்ந்திருந்த வெண்மதியை நோக்கி, மருத்துவரின் பின் நின்றிருந்த செவிலிப் பெண், முக மலர்ச்சியுடன், மற்ற விரல்களை மடக்கி ஆட்காட்டி விரலை மட்டும் நிமிர்த்தி, இரண்டு முறை கையை மேலும் கீழும் அசைத்து சைகைக் காட்டினாள். அந்த நிமிட சந்தோசம் வெண்மதியின் கண்களைக் கலங்க வைத்தது. பெண் மருத்துவர் முறையாக அவளிடம் அந்த மகிழ்வான செய்தியைச் சொல்லி அவளுடன் கை குலுக்கிக் கொண்டார்.

குடும்பத்தாரின் மகிழ்ச்சி சொல்லில் அடங்காததாக இருந்தது. செய்தி கேட்ட குடும்பத் தாரும் மிகவும் சந்தோஷம் கொண்டனர். கருவுற்றவளை மிகவும் கவனத்துடன் பேணி வந்தனர். கணவரும் பெற்றோரும் அவளிடம் மாறிமாறி கேட்டு அவளுக்கு விருப்பமானவற்றை வாங்கிக் கொடுத்துக் கொண்டே இருந்தனர்.

ஒருநாள் ஊரிலிருந்து நாராயணனின் சித்தி, கருவுற்றிருந்த பேத்தி பொண்ணை பார்க்க வந்திருந்தாள். ஊரிலிருந்து வந்திருந்த சித்தி பேத்திக்கு பால் கஞ்சி செய்துகொண்டிருந்தாள். அப்போது, வெளி யிலிருந்து வந்த செழியன், “வெண்மதி நான் என்ன வாங்கிக்கொண்டு வந்திருக்கிறேன் தெரியுமா உனக்கு?” என்று கேட்க, “தெரியவில்லையே” என்றாள் வெண்மதி.

“உனக்கு ரொம்ப பிடிக்குமே என்று சப்பாத்தி ஸ்டால் புரூட் சாலட் வாங்கி வந்திருக்கிறேன்; இந்தா சாப்பிடு” என்று கடையிலிருந்து வாங்கி வந்திருந்த ஃப்ரூட் சாலட் கிண்ணத்தை அவளிடம் தந்தான். அவளும் அதை ஆசையுடன் வாங்கி சாப்பிட தொடங்கினாள்.

பாட்டி பதட்டத்துடன், “அதை சாப்பிடாத வேண்டாம் அது” என்று சொன்னாள்.

இந்த நேரத்தில் வெளியில் சென்றிருந்த தமிழ்ச்செல்வியும் வீட்டிற்குள் நுழைந்தாள். பாட்டியின் பதட்டத்தை கண்டு திகைத்துப் போன தமிழ்ச்செல்வி, “அத்தை ஏன் அதை சாப்பிட வேண்டாம்” என்று சொல்கிறீர்கள் என்று கேட்டாள்.

“ஐயையோ உங்களுக்குத் தெரியாதா? ஃப்ரூட் சாலட்டில் அன்னாசிப் பழம் சேர்த்திருப்பார்கள். கருவுற்ற பெண் அன்னாசிப்பழம் சாப்பிட்டால் கரு கலைய வாய்ப்பு இருக்கிறது. எனவேதான் புரூட் சாலட் சாப்பிட வேண்டாம் என்று சொல்கிறேன்” என்றாள் பாட்டி.

பாட்டி சொல்லி முடிப்பதற்குள், பதறிப்போய் மகளின் கையில் இருந்த ஃப்ரூட் சாலட் கோப்பையை புடுங்கி, விடுவிடுவென்று மூலை யிலிருந்த குப்பை கூடையில் கொட்டிவிட்டாள், தமிழ்ச்செல்வி.

இதை எதிர்பார்க்காத வெண்மதி, “அம்மா அம்மா என்ன செய்கிறாய்?” என்று புரியாமல் கேட்டாள்.

“கருகலையும் என்றால் அந்த வாடையே உனக்கு வேண்டாம். அதுதான் தூக்கித் தள்ளி எறிந்தேன். நீ அதை சாப்பிட வேண்டாம்” என்று பதட்டத்துடன் சொன்னாள் தமிழ்ச்செல்வி.

பாட்டியும், “அம்மா நீ அதை சாப்பிட வேண்டாம். நான் உனக்கு சுக்கு முருங்கைப்பூ பூண்டு எல்லாம் போட்டு பால் கஞ்சி வைத்திருக்கிறேன். அதை வயிறு நிறைய குடி. உன் உடம்புக்கு நல்லது. உன் குழந்தைக்கும் நல்லது. இதோ கொண்டுவருகிறேன்” என்று சொல்லியபடி அடுக்களைக்குள் நுழைந்தாள்.

கருவுற்ற பெண்ணிற்கு கவனமாக செய்யவேண்டிய அனைத்து காரியங்களும் சிறப்பாக நடந்தன. மருத்துவரை பார்ப்பது, மருந்துகளை உண்ணுவது குழந்தையின் வளர்ச்சியை ஸ்கேன் செய்து பார்ப்பது என்று எல்லாமும் நிறைவாக நிறைவேற்றப்பட்டன.

ஆறு மாதங்கள் முடிந்து போயின. ஒரு நாள் தமிழ்ச்செல்வியின் அண்டை வீட்டுப் பெண், “உங்கள் மகளுக்கு ஆறு மாதம் முடியப்போகிறதே சீமந்தம் செய்ய வேண்டாமா?” என்று கேட்டாள்.

பொதுவாக அவர்களின் முற்போக்கு சிந்தனையை கடைப்பிடிக்கும் தன்மையினால்



இதுபோன்ற வாழ்க்கை வட்டச் சடங்குகளைப் பற்றி எதுவும் தெரியாத நிலைதான் தமிழ்ச்செல்வியினுடையது. எனவே, சீமந்தம் செய்வது என்றால் என்ன என்பதை அண்டை வீட்டுப் பெண்ணிடம் கேட்டு தெரிந்தபின் பத்து ஆண்டுகள் கழித்து கருவுற்றிருக்கும் தன் மகளுக்கு இதுபோன்ற மரபுரீதியான சடங்கை செய்து பார்க்க வேண்டும் என்ற ஆர்வம் உண்டாகியது.

பின் தனது கணவர் நாராயணனிடமும் மருமகனிடமும் பேசி சிறப்பான முறையில் வெண்மதிக்கு சீமந்தம் என்னும் வளைகாப்பு செய்வது என முடிவு செய்யப்பட்டது.

ஒரு நல்ல நாள் பார்த்து முறைப்படி சீமந்தம் சிறப்பாக செய்து முடிக்கப்பட்டது.

“அம்மா வெண்மதி நாளை பரிசோதனைக்காக டாக்டரிடம் போக வேண்டிய நாள். அவரிடம் ஞாபகப்படுத்தி விடு. நாளை நாம் ஆஸ்பத்திரி போக வேண்டும்” என்று மகளிடம் நினைவூட்டினார் தமிழ்ச்செல்வி. மறுநாள் மூவரும் மருத்துவமனைக்குச் சென்றார்கள். அந்த ஊரிலேயே மிகவும் ராசியான மருத்துவமனை என்று பிரபலம் அடைந்து இருந்தது அந்த மருத்துவமனை. சாலையிலிருந்து சற்று உள்வாங்கி பிரமாண்ட தோற்றத்துடன் காட்சியளித்தது. பெரிய பெரிய மரங்கள் மருத்துவமனை வளாகத்தில் காணப்பட்டன. அரசும் வேம்பும் பின்னி வளர்ந்திருந்த மரத்து மூட்டை சுற்றிக் கட்டப்பட்டிருந்த மேடையில் ஒரு பிள்ளையார் சிலை பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தது. அதற்கு வஸ்திரமும் புது மாலையும் அணியப்பட்டிருந்தன. தினமும் பிள்ளையாருக்கு பூஜை நடந்து வருவதை அந்த புது மாலை செய்தியாய் சொல்லிக் கொண்டிருந்தது.

பெண் மருத்துவரின் அறையின் முன்னே இருந்த இருக்கைகளில் மூவரும் காத்திருந்தனர். நிறைமாத வயிற்றுடன் வெண்மதி மூச்சு விடுவதற்குக் கொஞ்சம் சிரமப்பட்டு கொண்டுதான் இருந்தாள். தமிழ்ச்செல்வியும் மகளை ஆசுவாசப் படுத்துவது போல் அவளின் முதுகைத் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தாள்.

இந்த வேளையில் அங்கு வந்த ஒரு 50 வயதைத் தாண்டிய பெண்மணி தமிழ் செல்வியிடம், “அம்மா இது உங்கள் மகளா? இது தலை பிரசவமா?” என்பதாக கேள்விகளை அடுக்கிக் கொண்டிருந்தாள்.

இரண்டு கேள்விகளுக்கும் ஒரே பதிலாய், “ஆம், ஆம்” என்று இரண்டு தடவை சொன்னாள் தமிழ்ச்செல்வி.

“நல்லபடியாக பிரசவம் நடக்கும் கண்ணே நீ பயப்படாதே” என்று ஆறுதல் வார்த்தை சொல்லிய அந்தப் பாட்டி, தமிழ்செல்வியிடம், “பிள்ளையார் கோவிலில் இப்பொழுதுதான் சாமி கும்பிட்டுவிட்டு வந்தேன். எனது பேத்தியையும் இங்கேதான் பிரசவத்திற்கு சேர்த்து இருக்கிறோம். அவளுக்கு சுகப்பிரசவம் ஆகவேண்டும் என்று வேண்டிக்கொண்டு இந்த விபூதியை கொண்டு வந்திருக்கிறேன் எடுத்துக் கொள்.” என்று உள்ளங்கையில் இருந்த விபூதி பொட்டலத்தை நீட்டினாள்.

“உன் மகளுக்கும் சுகப்பிரசவம்தான் ஆகும். இந்த விபூதியை நீயும் பூசிக்கொண்டு உன் மகளுக்கும் பூசி விடு” என்று கூறினாள்.

தமிழ்செல்வி ஒரு சில நொடி தயங்கி பின் ஏதோ தீர்மானத்திற்கு வந்ததுபோல் அந்தப்பாட்டி நீட்டிய விபூதி பொட்டலத்தில் இருந்த விபூதியை எடுத்து வெண்மதிக்கு பூசிவிட்டாள். பாட்டியும் தனது வலது உள்ளங்கையை வெண்மணியின் தலைமேல் வைத்து, “கவலைப்படாதே கண்ணு உனக்கு சுகப்பிரசவமாகி நல்லபடியாய் பிள்ளையை பெற்றெடுப்பாய்” என்று நல்வாக்கு சொல்லி, “நான் வரேன் கண்ணு” என்றபடி அந்த இடத்தை விட்டு நகர்ந்தார்.

மருத்துவர்கள் குறிப்பிட்டிருந்த நாளிலேயே வெண்மதி சுகப்பிரசவத்தில் ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். இரு குடும்பத்தினரும் மிகவும்

சந்தோசம் அடைந்தனர். அந்தக் குழந்தை வெற்றிமாறன் என்ற பெயருடன் இரு குடும்பத்தாரின் செல்லத்துடன் வளர்ந்து வந்தான்.

இந்த சூழ்நிலையில் வெண்மதியின் கணவர் செழியனுக்கு வேறு ஊருக்கு மாற்றல் ஆனது. அதே நேரத்தில் அறிவழகன் பணி நிறைவடைந்து ஓய்வு பெற்றார். எனவே, எல்லோரும் செழியனுக்கு மாற்றலான ஊருக்கே குடிபெயர்ந்தனர். அங்கே செழியனுக்கு அடுக்ககத்தில் அரசு வீடு ஒதுக்கப்பட்டதால் அந்த வீட்டிலேயே குடியேறினர்.

வெற்றிமாறனுக்கு இப்பொழுது ஆறு வயது நிறைவடைந்து இருந்தது. இந்நிலையில், ஒரு நாள் திடீரென வெண்மதி வாந்தி எடுத்தாள். பதறிப்போன குடும்பத்தார் அவளை மருத்துவரிடம் அழைத்துச் சென்றனர். அவளை சோதித்த பெண் மருத்துவர் அவள் கருவுற்று இருப்பதாக குடும்பத்தாருக்கு செய்தி சொன்னார். இதைக் கேட்ட அனைவரும் மிகவும் மகிழ்ந்து போயினர்.

இந்தமுறையும் குழந்தை பேற்றை சிறப்பாக செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில் வெண்மதியின் உடல் நலம் மிகவும் கவனத்துடன் பேணப்பட்டு வந்தது. ஆறுமாதம் முடிந்தவுடன் தமிழ்ச்செல்விக்கு ஒரு எண்ணம் உண்டானது. முதல் குழந்தைக்கு செய்ததைவிட இந்த முறை சிறப்பான விதத்தில் சீமந்தம் செய்ய வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. அந்த முடிவுக்கு ஏற்ப ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

தமிழ்செல்விக்கு அந்த அடுக்ககக் குடியிருப்பில் தங்கள் வீட்டை ஒட்டி குடியிருந்து வரும் சிவகாமி அம்மாள் குடும்பத்தினருடன் நெருக்கமான பழக்கம் உண்டு. அந்தப் பழக்கத்தின் காரணமாக சிவகாமி அம்மாளிடம், "அம்மா அடுத்த வாரம் எனது மகளுக்கு வளைகாப்பு செய்ய ஏற்பாடு செய்திருக்கிறோம். நீங்கள் வந்து இருந்து அந்த விழாவை நல்லபடியாக நடத்தி தந்து எங்களுக்கு உதவ வேண்டும்" என்று கேட்டுக்கொண்டாள்.

"என்ன தமிழ் சொல்றீங்க, வெண்மதிக்கா வளைகாப்பு?" அதிர்ச்சியும் ஆச்சரியமும் கலந்த குரலில் கேட்டார் சிவகாமி அம்மாள்.

"ஆமாம், வெண்மதிக்குதான் ஏன் இப்படிக் கேட்கிறீர்கள்?"

"அப்படியென்றால் மாறன் வெண்மதி பெற்றக் குழந்தை இல்லையா?" என்ற சிவகாமி அம்மாள் கேள்வி தமிழ் செல்வியை துணுக்குற வைத்தது.

"அம்மா ஏன் இப்படி சொல்கிறீர்கள்?" என்று பதற்றத் துடன் கேட்டபடியே, "மாறன் தமிழ் செல்வி பெற்ற குழந்தைதான்" என்று படபடவென்று சொல்லி முடித்தாள் தமிழ்செல்வி.

"அப்படி என்றால் இரண்டா வது குழந்தைக்கு ஏன் சீமந்தம் செய்கிறீர்கள்?" என்று சிவகாமி அம்மாள் கேட்ட கேள்வியை புரிந்துகொள்ள முடியவில்லை தமிழ்ச்செல்வியால்.

"நீங்கள் சொல்வது ஒன்றும் எனக்கு புரியவில்லை; தயவு செய்து விளக்கமாக சொல்லுங்கள்?"

"'சீமந்தம் என்பது முதல் கருதரிக்கும் பொழுதுதான் ஏழாவது மாதம் செய்யும் சடங்கு. அதற்குப் பின் உருவாகும் குழந்தைகளுக்கு இந்த சடங்கு செய்வது நமது வழக்கம் அல்ல'' என்று விளக்கிச் சொன்னார் சிவகாமி அம்மாள்.

தமிழ்ச்செல்விக்கு குழப்பமும் வெட்கமும் உண்டானது. "அப்படி என்றால் இந்த சீமந்தம் நடத்தக்கூடாது என்று சொல்கிறீர்களா?"

"இப்படி இரண்டாவது குழந்தைக்கு சீமந்தம் நமது மரபில் பழக்கம் இல்லை என்றுதான் என்னால் சொல்ல முடியும்" என்று சொல்லி முடித்தார் சிவகாமி அம்மாள்.

சீமந்த ஏற்பாடுகள் நிறுத்தப்பட்டன. இப்பொழுது நாராயணனுக்கு சீமந்தம் என்பதைப் பற்றி முழுமையாக தெரிந்துகொள்ள வேண்டும் என்று தோன்றியது. அதுதொடர்பாக வலைதளத்தில் தேடியபோது அந்த கட்டுரை அவர் கண்ணில்பட்டது.

"புராதன கால இந்தியாவில், ஆண்களும் பெண்களும் தாராளமான பாலியல் சுதந்திரம் அனுபவித்தார்கள். அமெரிக்க, ஐரோப்பிய நாடுகளில் இன்று வாழும் மேலை தேய மக்கள்கூட, அக்கால இந்தியர்கள் அளவுக்கு பாலியல் சுதந்திரம் அனுபவிக்கவில்லை. மேலைத்தேய நாட்டவர்கள், இருபதாம் நூற்றாண்டில்தான் பாலியல் கல்வியின் முக்கியத்துவத்தை அறிந்து கொண்டனர். இந்திய கலாச்சாரத்தில், அது தொன்று தொட்டு பின்பற்றப்பட்டு வந்து இருக்கிறது.

இந்தியா வந்த மொகலாயர்களும் ஆங்கிலேயர்களும் இந்தியர்களின் பாலியல் சுதந்திரத்தை பறித்து, 'நாகரீகமடைந்த ஒழுக்கசீலர்களாக' மாற்றினார்கள் என்பதுதான் வரலாற்று சமூகவியலாளர்களின் கருத்து. குறிப்பாக பிரிட்டனில் விக்டோரியா மகாராணி விதித்த ஒழுக்கநெறிகளை நாம்இன்றைக்கும் 'தமிழ் கலாச்சாரம்' என்ற பெயரில் பின்பற்றி வருகின்றோம்.

இன்றைக்கும் இந்தியாவில் வாழும், பழங்குடி இனங்கள் மத்தியில் பாலியல் சுதந்திரம் நிலவுகின்றது என்பதாகத்தான் இந்திய வாழ்வு முறை பற்றி ஆய்வாளர்கள் சொல்கிறார்கள். இந்தத் தகவலை பார்க்கையில் பலருக்கு கொஞ்சம் அதிர்ச்சியாகக் கூட இருக்கக்கூடும். ஆனாலும், இதில் அதிர்ச்சி அடைய ஏதும் இல்லை.

நமது வாழ்க்கை வட்டச் சடங்குகள் ஆழ்ந்து நோக்கினால் அவை நமக்கு புரியவரும். சீமந்தம் என்பது நமது பண்பாட்டில் கடைபிடிக்கப்பட்டு வரும் ஒரு முக்கியமான சடங்காகும். இது ஒரு பெண் முதல் கர்ப்பமுற்ற ஏழாவது மாதம் கணவன் வீட்டில் வைத்து நடத்தப்படும் ஒரு சடங்காகும். சீமந்தத்தின் உண்மையான தாத்பரியம் நம்மில் பலருக்கும் இன்று தெரியாமல் இருக்கிறது.

பழங்குடி வாழ்வு முறையில் வயதுக்கு வந்த ஆணும் பெண்ணும் திருமணத்திற்கு முன்னமேயே நெருங்கி பழகுவார்கள். ஊர் மன்றில் உள்ள மந்தை என்னும் மந்தில்தான் இரவுகளில் இருவரும் தங்குவர். மந்தை என்பது பொது நிகழ்வுகளுக்கு முடிவெடுக்க அனவரும் கூடும் பொது இல்லம். ஆணும் பெண்ணும் இந்த இல்லத்தில் தங்கி பழகி மூன்று



மாதத்தில் கருவுற்றால்தான் இருவருக்கும் ஊர் பெரியவர்களால் திருமணம் நடத்தி வைக்கப்படும். அவ்வாறு பெண் கருவுறாவிட்டால் அவர்களுக்குத் திருமணம் நடக்காது. இப்படி அந்தப் பெண் கருவுற்றால் ஏழாவது மாதம் ஊர் கூடி சீமந்தம் என்ற சடங்கை சிறப்பாக செய்து இருவருக்கும் திருமணம் நடத்தி வைப்பர். மந்தையில், அதாவது மந்தில் இருவரும் கூடியதால் நிகழ்ந்த நிகழ்வு சீமந்தம் ஆனது. சீ என்பது சீர், மேன்மை, சிறப்பு என்ற பொருளில் முன்னொட்டானது.

இதன் எச்சம்தான் நமது பண்பாட்டில் சீமந்தம் அல்லது வளைகாப்பு என்கிற சடங்காக ஒட்டிக்கொண்டு இன்று வரை தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது. முதல் குழந்தையை சீமந்தபுத்திரன் அல்லது சீமந்தபுத்திரி என்று சொல்லும் வழக்கம் இன்றும் நம்மிடையே உண்டுதானே.

சீமந்தம் என்று இன்றைய சமூகத்தில் பரவலாக நடத்தப்பட்டு வரும் சடங்கின் ஆதிமூலம் இப்படித்தான் இருந்தது என்றபடியே புரிந்துகொள்ள வேண்டி இருக்கிறது".

இப்படியாக அந்த இணையதளக் கட்டுரை முடிந்த்து

இணையதளத்தில் படித்த கட்டுரை நாராயணனின் மனதில் எந்தவிதமான உணர்வை ஏற்படுத்தியது என்பதை புரிந்துகொள்ள முடியாத வகையில் அவர் முகத்தில் குழப்ப ரேகை படர்ந்து இருந்தது.

இப்போது அவரது மூளையின் நினைவுப் பெட்டகத்தில் ஒரு சிற்றறை திறந்துகொண்டது. நினைவகத்தின் திறப்பில் விரிந்த காட்சி அவர் கண் முன்னே ஓடியது.

அது ஒரு சித்திரை மாத நண்பகல். தார் சாலையின் ஜல்லிகளைப பிடிப்புடன் பிடித்து இருந்த தார்கூட அந்த கத்திரி வெயிலில் இளக்கம் கண்டிருந்தது. சாலையில் வந்து கொண்டிருந்த நாராயணன் தனக்கு எதிரே அந்த கொளுத்தும் வெயிலையும் பொருட்படுத்தாமல் விரைவாக நடந்து வந்து கொண்டிருந்த தம்பி மகனின் மனைவியான அமுதவல்லியை எதிர்கொண்டார். அவர் தம்பியின் குடும்பம் நாராயணனின் பகுத்தறிவு கொள்கையிலிருந்து முரண்பட்ட கடவுள் நம்பிக்கை கொண்ட ஒரு நடுத்தரக் குடும்பம்.

தொடக்க காலத்தில் தம்பியிடம் தனது பகுத்தறிவு சார்ந்த சிந்தனைகளைக் கடைப்பிடிக்க வற்புறுத்தி வந்த நாராயணன் ஒருகட்டத்தில் சலிப்படைந்து தம்பி அவன் இஷ்டம்போல் நடந்து கொள்ளட்டும் என்று விட்டுவிட்டார்.

எதிர்ப்பட்ட தம்பியின் மருமகளிடம்,"அமுதா இந்த வேனா வெயிலில் இவ்வளவு விரசலா எங்க போற" என்று கேட்டார்.

"மாமா இன்னைக்கு வெள்ளிக்கிழமை 12 மணிக்கு ராகு காலம் முடியுது. அதுக்குள்ள நாகராஜன் கோவில் பாம்பு புற்றுக்கு பால் ஊத்தனுமுன்னுதான் விரசலா போறேன் மாமா" என்று அவர் பதிலுக்கு காத்திராமல் அவரை கடந்து சென்று கொண்டிருந்தாள் அமுதவல்லி.

அவரைக் கொஞ்சமும் பொருட்படுத்தாத அமுதவல்லியின் அலட்சியமான பதிலில் நிறையவே கடுப்பாகிப் போன நாராயணன், "இந்த ஜனங்களுக்கு எத்தனை சொன்னாலும் புத்தியில் ஏறுவது இல்லையே. ஏன் எங்காவது பாம்பு பால் குடிக்குமா? முட்டையை குடிக்குமா? இந்த அறிவு இல்லாமல் மூட நம்பிக்கையோடு எப்படித்தான்



இவர்கள் வாழ்கிறார்களோ தெரியவில்லை" என்று வாய்விட்டே புலம்பித் தீர்த்துவிட்டார்.

நாராயணன் தனக்கு பின்னே இருந்து கலகலவென்று யாரோ சிரிக்கும் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தார். அங்கே இடுப்பில் காவி வேஷ்டியும் தலையில் காவி துண்டு தலைப்பாகையுமாக வெண் தாடியுடன் பரதேசி போல காணப்பட்டவர் சிரித்துக் கொண்டிருந்தார்.

ஏற்கனவே மருமகளின் அலட்சியத்தால் கடுப்பாகி போயிருந்த நாராயணன் அந்த சாமியாரின் சிரிப்பில் மேலும் கடுப்பாகிப் போனார். "ஏன்யா இப்போ இவ்வளவு சத்தமா சிரிக்கிறியே ஏன்?" என்று சற்று கோபமாகவே கேட்டார்.

சிரிப்பதை நிறுத்திக்கொண்ட அந்த சாமியாரின் தோற்றத்தில் இருந்தவர் நாராயணனை நோக்கி, "நீங்களெல்லாம் படித்துவிட்டால் பகுத்தறிவு பேச வேண்டும் என்று நினைத்துக்கொண்டு இருக்கிறீர்கள். ஆனால், இங்கு மரபில் உள்ள பல விஷயங்களில் புதைந்திருக்கும் அறிவுபூர்வமான காரணங்களை புரிந்துகொள்ள மறுக்கிறீர்கள். உங்களை கடுப்பாக்குகிற பாம்புக்கு பால் ஊற்றும் செய்கை அறிவுப்பூர்வமான ஒன்று என்பதை நீங்கள் புரிந்துகொள்ள போவதே இல்லை.

மூடநம்பிக்கை என்று நீங்கள் விமர்சிக்கும் இந்த பழக்கம் பெரியவர்களால் ஒரு நோக்கத்தின் அடிப்படையில் நடைமுறைப் படுத்தப்பட்டு வந்திருக்கிறது. விளக்கமாகச் சொல்கிறேன் கேட்டுக் கொள்ளுங்கள்.

பாம்பு ஒரு நச்சுயிரி. பாம்புக்கடி பெரும்பாலும் மரணத்தைத் தரக் கூடியது. எனவே, மனிதர்களுக்கு பாம்பை கண்டாலே அச்சமும் அதை அடித்துக்கொல்லவேண்டும் என்ற உணர்வும் உண்டாகும்.

ஆனால், நமது மரபில் எந்த ஒரு உயிரையும் கொல்லுவது என்பது பெரும் பாவம் என்று கருதப்படுவது உண்டு. எனவே, பாம்புகள் விஷயத்தில் அவற்றை கொல்லுவதைத் தவிர்த்து அவற்றின் இனப்பெருக்கத்தை கட்டுப்படுத்தும் விதத்தில்தான் பாம்பு புற்றில் பால் ஊற்றும் பழக்கம் உருவானது.

பெரும்பாலும் இயற்கையில் இனச்சேர்க்கைகான உணர்வு, பெண்பால் உயிரியிடம் இருந்து வெளிவரும் ஒரு வகையான மணத்தால், ஆண் இனம் தூண்டப்பட இனச்சேர்க்கை நடைபெறுகிறது. இந்த மணத்தைக் கட்டுப்படுத்தவே புற்றில் பாலும் முட்டையும் ஊற்றப்படுகிறது. இந்த இரண்டில் இருந்து வெளிப்படும் மணம் இயற்கையாய் பெண் உயிரியிடம் இருந்து வெளிப்படும் மணத்தை அமுக்கி விடுவதால், ஆணால் பாலுணர்வைத் தூண்டும் மணத்தை உணர முடியாது போய்விடுகிறது. இதன் மூலம் இனவிருத்தி கட்டுப்படுத்தப்படுகிறது.

இந்த நோக்கத்தின் அடிப்படையில்தான் புற்றில் பால் ஊற்றப்படுகிறது. இதையெல்லாம் அறிவுபூர்வமாக என்றுதான் நீங்கள் புரிந்துகொள்ள போகிறீர்களோ?" என்று சொல்லிய சாமியார் மறுபடியும் கலகலவென்று சிரித்தபடியே அந்த இடத்தை விட்டு நகர்ந்தார்.

சீமந்தம் பற்றி இணையத்தில் படித்தக் கட்டுரை இந்த நிகழ்வை ஏன் அவருக்கு நினைவு படுத்தியது என்பது புரியாமல் குழம்பிக் கொண்டிருந்தார் நாராயணன். ●

**வெள் உவன்**
**<veluvan@gmail.com>**

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்




விலை ரூ.120/-




விலை ரூ.100/-




விலை ரூ.100/-




விலை ரூ.100/-




விலை ரூ.150/-




விலை ரூ.120/-




விலை ரூ.140/-

கவிதை

# திருவல்லிக்கேணி அக்ரஹாரத்து மாடுகள்

பச்சோந்தி

1

பறக்கும் ரயிலின் நிழலில் மாட்டுத் தொழுவம்
சுவரில் துளையிட்ட
கன்றின் கயிறு அறுபடாதிருக்கிறது
பிளாஸ்டிக் கூடைக்குள் முட்டைக்கோஸும் மக்காச்சோளமும்
கொசுக்கள் மொய்க்கும் நீரைக்கொத்தி வானை வெறிக்கும் காக்கை
பாலத்தின் இடுக்கில் தொங்கும் பச்சிலைக்கு நாக்கை நீட்டி
தொண்டை எலும்பை விழுங்கும் மாடு
திருப்பிப் போட்ட கேள்விக்குறிக் கொம்பையும் அசைக்கிறது

2

நொச்சிமரக் கிளையில் ஆம்பல் விற்கிறாள்
மாநகராட்சி வைத்த அதன் வேர்களை
காற்று அசைத்து அசைத்துப் பார்த்திருக்கிறது
பூக்காரிதான் நிமிர்த்திவைத்து நீரூற்றி வளர்த்தாள்
தலைவலியில் தவித்த ஓம்பாளர்கள்
நொச்சியை உருவி உருவிச் சென்றனர்
திதிக்குப் படைத்த பொங்கலை மாட்டுக்கு வைக்கையில்
தெற்கிலிருந்து பாய்ந்த கொம்புகள்
சுடும் இலையைப் பறித்தன
மிரண்ட மாடு
கண்ணை உருட்டி வாயைத் திறந்தபடி
கேமராவுக்குள் என்னை விரட்டுகிறது

3

சிங்காரச்சாரி தெருவின் நடுவில் அசையாது நிற்கிறது மாடு
சூம்பிய காம்புகளைச் சப்பிக்கொண்டே இருக்கிறது கன்று
விரைந்துவந்த வாகனம் அகத்திக் கீரைக்கட்டை எறிந்து செல்கிறது
கிழக்கிலிருந்து வந்த மாடு
விட்டுச் சென்ற தண்டுகளை மோந்து மோந்து பார்க்கிறது
கால்மேல் காலிட்டு வலக்கரம் உயர்த்தியபடி
ஊர்தியில் செல்லும் ஷீர்டி பாபாவை
தன் வால் மயிரால் கன்னத்தில் அறைகிறது

4

தெருகுலுங்க கொம்பசைத்த மாடு
வடக்கிருந்த கறிவேப்பிலையை மேய்ந்தபோது
சூவென்ற சத்தம் விரட்டியது
தெற்கிலிருந்த பீர்க்கங்காயைத் தின்ற போது
கைகள் அடித்து விரட்டின
மேற்கிலிருந்த ஆப்பிள் அருகில் சென்றதும்
கட்டை அடித்துத் துரத்தியது
கிழக்கிலிருந்த பூக்களை இழுத்ததும்
ரப்பர் பைப் அடித்து விரட்டியது
ஓங்கி உயர்ந்த மின்கம்பத்தின் அடியில்
மூக்குத் துளையை நக்கி வாலாட்டும் போது
மின் பெட்டியின் ஓரம் கொட்டிய கேரட்டை
கடைவாய் ஒழுக ஒழுகத் தின்கிறது
அங்காடியை அலைக்கழித்த மாடு

5

வாகன இரைச்சலிலும் உறங்குகிறது
துருப்பிடித்த ஆட்டோவில் கட்டிய கன்று
சுள்ளென்று அடிக்கும் வெய்யிலிலும்
டைல்ஸ் தரைமீது எப்படித்தான் படுத்திருக்கிறதோ
கண்ணாடிக் கதவைத் திறந்து
வாசலை எழுப்பி எழுப்பி விடுகிறாள்
ஏசி காற்றில் வெப்பம் தணிந்ததுதான் மிச்சம்
பச்சை மஞ்சள் குடையின் கீழ் காய்கறி விற்பவள்
வாழைப் பூ இதழ்களைப் பிய்த்துப் பிய்த்து எறிகிறாள்
தின்று முடித்ததும் அவளும் அடித்து விரட்டுகிறாள்
சற்று நிதானித்த கார்
மாட்டின் மோவாயை மோதியபடி நகர்கிறது
அதன் நிழலைப் பற்றியபடி கன்றும்

6

மாலை கோர்த்து எஞ்சிய அறுகம்புல்லை
மேய்ந்துகொண்டிருகிறது மாடு
பூணூல் ஆடியபடி வந்த கிழவன்
கிண்ணத்துக் கீரைக்கடைசலை
நடைமேடை மீது வைத்தான்
உறிஞ்சிக்குடித்த மாடுகள்
நண்பகலின் உயர்ந்த கட்டடத்து நிழலில் இளைப்பாற
கீழ்த்தளத்துப் பணிப்பெண்ணோ
நிழலற்ற மாட்டை விரட்டிக்கொண்டே இருக்கிறாள்



7

வாகனத்தில் தொங்கும் பூமாலையைப் பற்றி இழுக்கிறது மாடு
சிதறும் இலைகளை
கன்று மேய்கிறது
உருண்டோடும் எலுமிச்சையை
வாகனத்தின் அடியில் பதுங்கிய நாய்
விரட்டி விரட்டிச் செல்கிறது

8

ஸ்ரீஆதிநாத் ஜெயின் கோயில் மணியோசை ஒலிக்கிறது
சுவரில் மாட்டப்பட்ட சிசிடிவி கேமரா முன்பு
தேங்காய்ப் பருப்புகளைக் கொறித்துக்கொண்டிருக்கிறான்
தெருவிளக்கு வெளிச்சத்தில் மனிதக் கால்கள் தெருக்களை மறைக்க
இன்னும் மாடுகளின் கனசதுர வயிறு குழிவிழுந்தே காணப்படுகிறது
மாட்டின் கழுத்தில் ஊசியைக் குத்தியதும்
கன்றை அவிழ்த்துவிடுகிறான் சிறுவன்
இரண்டொரு சப்புதலுக்குப் பிறகு கயிறு இறுக்கப்பட
CLF பல்பில் பளபளக்கின்றன காய்களும் பழங்களும்

9

ஆட்டோ வெளிச்சத்தில் துள்ளிவருகிறது கன்று
பால்கொடுக்கும் மாட்டுக்கு கஞ்சி வாளியை வைத்து நிற்கிறாள் பாட்டி
மகிழ மரத்தில் தொட்டிகள் தொங்குகின்றன காலங்காலமாய்
பார்த்தசாரதி கோயிலுக்குள் நுழைபவன்
இரண்டு வாழைப்பழங்களை மாட்டுக்கு நீட்டி
குண்டியைத் தொட்டுக்கும்பிடுகிறான்
நழுவி விழும் ஒற்றைப் பழத்துக்கு
சற்று தூரத்தில் நின்றவள் திடுக்கிடுகிறாள்
சக்கரங்களுக்குள் புகுந்து ஓடுகிறது பூனை

10

தொழுவமற்ற மாட்டின் கால்கள்
இருளிலும் ஒளியிலும் அலைகின்றன
கோயில் வாசலில் படுத்திருக்கும் அதன் முதுகின் மீது
ஒரு கல் எறியப்படுகிறது
இடைவிடாது ஹாரன் ஒலிக்கிறது
ஆனாலும் எழுவேனா என்கிறது
முதுகெலும்பின் மீது முழங்கையால் குத்தி விரட்டுகிறவனை
ஆசீர்வதிக்கிறாள் மூதாட்டி
தான் படுத்திருந்த தெற்குக் குளக்கரைத் தெருவையே
சுற்றிச் சுற்றி வருகிறது மாடு ●

# மரண தேவதையின் ஃபாசிஸம்!



சாதனா

ஒரு மில்லியனுக்கும் மேற்பட்ட மக்கள் துன்புறுத்திக் கொலை செய்யப்பட்ட இடம், ஆசுவிட்ஸ். துன்புறுத்தலென்றால் வெறும் அடி, உதை அல்ல; இதைப் போன்றொரு மனித அவலம் இனி இந்தப் பூமியில் நடந்தேறிவிடுமா என்று சிந்திக்க வைக்கும் அளவுக்கு அந்தத் துன்புறுத்தல்கள் இருந்திருக்கின்றன. சமீபத்தில் அங்கு சென்றிருந்தபோது யூதர்களின் நெஞ்சைப் பிளக்கும் ஓலங்கள் என் காதுகளுக்குள் ஊடுருவிய படியிருந்தன.

போலந்தில் ததேயுஸ் என்கிற முப்பத்து மூன்று வயது இளைஞர் ஒருவரைச் சந்தித்தேன். தான் குடியிருக்கும் வீட்டுக்கு என்னை அழைத்துப் போனார். பரந்து விரிந்த பிரமாண்டமான வீடு. அந்த வீட்டின் சமையலறையில் ஒரு நிலவறை இருந்தது. ஆறடி அகலமும் ஆறடி உயரமும் கொண்ட மிகச்சிறிய அறை. ஒரு பேச்சுக்குத்தான் அதை அறை என்கிறேனே தவிர உண்மையில் அதுவொரு குழி. உள்ளே இறங்கி, கதவையும் மூடிக்கொண்டால் மூச்சு விடவே சிரமமாக இருக்கும்.

இரண்டாம் உலகப்போரின்போது 'ஸ்கோசிலாஸ்' என்கிற ஆறுபேர் கொண்ட யூத குடும்பம், நாசிக்கள் வரும்போது அந்தக் குழிக்குள் இறங்கியே தங்களை நாசிக்களிடமிருந்து மறைத்துக்கொள்ள வேண்டியிருந்தது. ஒருதடவை, இந்த வீட்டுக்கு அருகிலிருந்த ஒருவர், ஸ்கோசிலாஸ் பற்றியும் அவர்களின் மறைவு வாழ்க்கை பற்றியும் நாசிக்களிடம் போட்டுக் கொடுத்து விடுகிறார். படையெடுத்து வந்த நாசி அதிகாரிகள் வீட்டின் ஒவ்வொரு பகுதிகளாக சல்லடை போட்டுத் தேடுகிறார்கள். இறுதியில் சமையலறையில் இருந்த குழியிலிருந்து ஸ்கோசிலாஸின் குடும்பத்தை நாசி அதிகாரிகள் கண்டுபிடிக்கின்றார்கள். அடுத்த நிமிடமே, அந்த வீட்டின் பின்புறமாய் அவர்கள் தீயிலிட்டு கொளுத்தப்படுகிறார்கள்.

ததேயுஸ் இவை யாவற்றையும் என்னிடம் சொல்லி முடித்தபோது எனக்கு என் தேகமானது சில்லிடுமாற்போல் படவே ஒருதடவை என் உடலை உதறி மீண்டும் ஒருக்களித்து அமர்ந்தேன்.

ஸ்கோசிலாஸின் குடும்பம் பற்றி மேலும் அறிய ஆவலாக இருந்தது. ஸ்கோசிலாஸின் குடும்பத்தில் தப்பிப் பிழைத்தவர்களென யாருமே இல்லையா என்று கேட்டேன். அதற்கு ததேயுஸ், "ஏன் இல்லாமல், நானும் ஸ்கோசிலாஸின் குடுப்பத்தைச்சேர்ந்தவன்தான். என்னுடைய தந்தையான பெட்ராவ்ஸ்க்கி, நாசி அதிகாரிகள் தங்களைத் தேடி வரும்போது பக்கத்திலிருந்த பன்றிப் பண்ணையில் வைக்கோல்களுக்கு மேலாகத் தன்னை மறைத்துக்கொண்டு அவர்களிடமிருந்து தப்பினார்" என்றார்.

நான் அந்தக் குழிக்குள் இறங்கி கதவை மூடிக்கொண்டபோது ஸ்கோசிலாஸ் குடும்பத்தின் மூச்சுக் காற்று இன்னமும் அந்தக் குழியில் மிச்சமிருப்பதாய் எனக்குத் தோன்றியது. சுண்ணாம்புக் கற்களிலான சுவரை ஸ்பரிசித்தபோது ஸ்கோசிலாஸ் குடும்பத்தினர் ஒவ்வொருவருடைய முகங்களும் நினைவில் வந்து போயின. அதற்கு மேலும் அந்தக் குழியில் இருக்கப் பிடிக்காமல் நான் குழியை விட்டு வெளியேறலானேன்.

'தி ஹியூமன் ஃசெண்டிபெட்' (The Human Centipede) திரைப்படத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது மேற்குறிப்பிட்ட சம்பவம் நினைவுக்கு வந்தது. மூன்று பாகங்களைக் கொண்ட இத் திரைப்படத்தின் முதலாவது பாகம், 2009இல் 'முதலாவது சீக்வன்ஸ்' என்ற பெயரிலும்; இரண்டாவது பாகம், 'முழுமையான சீக்வன்ஸ்' என்ற பெயரில் 2011இலும்; மூன்றாவது பாகம், 'இறுதி சீக்வன்ஸ்' என்றபெயரில் 2015இலும் வெளியாகின.

பலரை அழைத்து வந்து, நாய்களைப் போல் வரிசையாக நிற்கப் பண்ணி, முன்னால் இருப்பவர்களின் குதத்தையும் அடுத்திருப்பவர்களின் வாய்களையும் ஒன்றோடொன்று இணைத்துத் தைத்து விடுகின்றார்கள். வலியில் கதறக்கூட முடியாது. ஒரு பூரானைப் போல் ஊர்ந்து கொண்டிருப்பவர்களுக்கு பசியெடுத்தால் வாயில் குதத்தைக் கொடுத்துக் கொண்டிருப்பவரின் மலமே ஆகாரம். வயிற்றைப் புரட்டினால் வாந்தி எடுக்கவும் முடியாத நிலை. நினைத்துப் பார்க்கவே பயமாகவும் அருவருப்பாகவும் இருக்கிறதல்லவா? இதுதான் 'தி ஹியூமன் ஃசெண்டிபெட்' திரைப்படத்தின் கதை.

இப்படத்தை எடுத்த டாம் சிக்ஸ் 1948ஆம் ஆண்டு பிறந்தவர். நெதர்லாந்தில் அறியப்பட்ட ஓவியர். சிறுவயது முதலே



திரைப்படம் பார்ப்பதில் அதிக ஆர்வம் கொண்டவர். ஒருதடவை, நெதர்லாந்து தொலைக்காட்சி ஒன்றில் ஒளிபரப்பப்பட்ட நகைச்சுவை நாடகமொன்றில் சேட்டைக்கார குழந்தையைத் தண்டிப்பதற்காக அதன் வாயில் தன் குதத்தைக் கொடுத்து மலம் கழிக்கிறான் ஒருவன். ஆரம்பத்தில், அது அவருக்கு நகைச்சுவையாகத் தோன்றினாலும் பிற்பாடு, அதையே தன் திரைப்படத்துக்கான கருவாக எடுத்துக்கொள்கிறார்.

புனைவுத் தன்மையுடைய திரைப்படங்களை இயக்குவதிலோ அல்லது யதார்த்தத்துக்கு மீறிய மீபுனைவுத் தன்மையுடைய திரைப்படங்களை இயக்குவதிலோ டாம் சிக்ஸ் ஆர்வம் கொள்வதில்லை. 'தி ஹியூமன் ஃசெண்டிபெட்' மூன்று பாகத்திலும் அரசியல் கலந்த, அதேநேரம் அங்கத மொழியில் கூறப்பட்ட யதார்த்தத் தன்மையை உணர முடியும். 'இறுதி சீக்வன்ஸ்' முழுக்க முழுக்க அங்கதத்தை அடிப்படையாகக் கொண்டது. ஒருவகையில், தன் படைப்பில் ஒரு தனித்துவமாக 'இதை' டாம் கையாளுகிறார் எனவும் கொள்ளலாம்.

*1975*இல், இத்தாலிய இயக்குநரான பியர் பாலோ பசோலினி என்பவரால் எடுக்கப்பட்ட 'சாலோ' (Salo Or The 120 Days Of Sodom) திரைப்படம் தன்னுள் மிகப்பெரும் அதிர்வலைகளையும் தாக்கத்தையும் ஏற்படுத்தியதாகக் கூறும் டாம், அதன் நீட்சியாகவே 'தி ஹியூமன் ஃசெண்டிபெட்' திரைப்படத்தை எடுத்தேன் என்கிறார். டாமின் படங்கள் பசோலினியின் படங்களைப் போலவே மனித உடல் மீதான அதீத வன்முறைகளையும் பாலியலையும் உடலை நடுக்கச் செய்யும் அருவருப்பையும் கொண்டன. 'தி ஹியூமன் ஃசெண்டிபெட்' மூன்றாவது பாகத்தில், கைதி ஒருவனின் விதைப்பையை அறுத்து, இரண்டு கொட்டைகளையும் அவித்துச் சாப்பிடுவார் சிறை வார்டனான பெல்.

டாமின் படங்கள் பார்வையாளர்களின் இன்பத்துக்காக, புனைவையோ யதார்த்தத்துக்கு மீறிய தன்மையையோ கொண்ட படங்களோ கிடையாது. மாறாக, மனித இனம் அதே மனித இனத்தின் மீது ஏதோவொரு காலகட்டத்தில் கொட்டித் தீர்த்த காழ்ப்புகளையும் வன்மத்தையும் குரோதத்தையுமே நிகழ்த்திக் காட்டுகின்றன.

ஆம், 'தி ஹியூமன் ஃசெண்டிபெட்' இரண்டாம் உலக யுத்தத்தின் போது நாசிக்களால் யூதர்களின் மீது கட்டவிழ்த்து விடப்பட்ட வன்முறைகளின் திரைவடிவம். அதிகாரம் ஒரு மனிதனை எப்படியெல்லாம் குரூரம் மிக்கவனாக மாற்றி விடுகிறது என்பதை தன் திரைப்படத்தின் மூலம் வெளிச்சம் போட்டுக்காட்டியிருக்கிறார், டாம்.

மீறிய அதிகாரமும் தன்னை எதிர்ப்பதற்கு யார் இருக்கிறார்களென்கிற சிந்தனையும்தான் ஒரு மனிதனைக் கட்டற்ற ஃபாசிஸவாதியாக உருவாக்கி விடுகிறது என்பதை என் அனுபவத்திலிருந்தே எடுத்துக்காட்ட முடியும்.

சில ஆண்டுகளுக்கு முன்னர்,



பாரிசில், இத்தாலிய உணவுச்சாலை ஒன்றில் எச்சில் கோப்பைகளைக் கழுவிக் கொண்டிருந்தேன். அப்போது எனக்கு வதிவிட உரிமையும் கிடையாது; வேலை செய்வதற்கான பத்திரமும் கிடையாது. இன்னொருவரின் அடையாள அட்டையை என்னுடையது எனக் கூறி வேலை செய்துகொண்டிருந்தேன். இந்த விஷயம், எப்படியோ செஃப்புக்கு - செஃப் என்றால் ஃபிரஞ்சில் சமையற்காரர் - தெரிந்துவிட்டது. நாயை விடவும் கேவலமாக நடத்தினார். என்னை அழைப்பதே கெட்ட வார்த்தை சொல்லித்தான். (பன்றியோடு புணர்ந்ததால் பிறந்தவனே; கழுவுகிறாயா தூங்குகிறாயா?) இரண்டு பேர் பார்க்கும் வேலையை நான் ஒருவனே செய்யும்படி சொன்னார். மீறும்போது கரண்டியால் அடித்தார்.

நாம் நினைப்பது போன்று வெள்ளைக்காரர்கள் எல்லோருமே நல்லவர்கள் கிடையாது. குரோதம், வன்மம், காழ்ப்பு, பொறாமை என்பது அடிப்படை மனித உணர்வுகள். அது கீழைத்தேய மனிதர்களாக இருந்தாலும் சரி, மேலைத்தேய மனிதர்களாக இருந்தாலும் சரி. எல்லா மனிதர்களிடமும் அவ்வுணர்வுகள் பொதுவானவையாக இருக்கின்றன. ஒருவனின் நிலை சார்ந்து அவ்வுணர்வுகள் மறைக்கப்பட்டும் வெளிப்படுத்தப்பட்டும் விடுகின்றன. என்னிடம் அதிகாரமிருக்கிறது. அவன் நிர்கதி நிலையிலிருக்கிறான் என்கிற வன்ம உணர்வே என் மீதான அந்த இத்தாலிய செஃப்பின் வன்முறைக்கு அடிப்படை.

'தி ஹியூமன் ஃசெண்டிபெட்' திரைப்படத்தை லண்டனில் திரையிட்டபோது சிலர் வாயிலெடுத்தார்கள். அரங்கத்தைவிட்டே காலி செய்தார்கள். காரணம்: மனநிலை பாதிக்கப்பட்ட ஒருவர் பிறந்த குழந்தையைக் குரூரமாகக் கொலை செய்கிறார் என்பதுடன் உடலை நடுங்கச் செய்யும் அளவுக்கு அருவருப்பு நிரம்பிய பாலியல் காட்சிகளால் திரைப்படம் நிரம்பியிருந்தது என்பதும்தான். சிலர், 'தி ஹியூமன் ஃசெண்டிபெட்' திரைப்படத்துக்குத் தடை விதிக்கக் கோரி ஆர்ப்பாட்டம் செய்தார்கள். டாம் சிக்ஸை கொலை செய்து விடுவோமென மிரட்டினார்கள். இதனால், இங்கிலாந்து திரைப்படத் தணிக்கைத் துறை 'குறிப்பிட்ட' காட்சியைப் படத்திலிருந்து நீக்கி விடுகிறது.

படத்தில், மருத்துவர், ஜோசப் ஹெய்டர் கதாபாத்திரத்தில் நடித்திருந்த டைட்டர் லேசர், 'தி ஹியூமன் ஃசெண்டிபெட்' திரைப்படத்தைப் பற்றி பேட்டி ஒன்றில் கூறுகிறார்: "நான் நாசி அதிகாரியான ஜோசப் மெங்லெயின் கதாபாத்திரத்தில் நடித்தபோது என்னை நான் மெங்லெயாகவே உணர்ந்தேன். நிஜமாகவே யூதர்கள் மீது ஃபாசிஸ வன்முறையை நிகழ்த்துவதாகக் கனவு கண்டேன். இதனால் உண்மையாகவே நான் மாபெரும் குற்றவுணர்வுக்கு உள்ளானேன்."

ஜோசப் மெங்லெ, *1911 மார்ச் 11ஆம்* தேதி ஜெர்மனியில் பாவாரியா என்கிற ஊரில் குடும்பத்தில் மூத்த குழந்தையாகப் பிறந்தார். அயலவர்களால் புத்திசாலியான சிறுவன் எனவும் துடிப்பானவன் எனவும் அறியப்பட்ட ஜோசப் மெங்லெ முனிச்சில் தத்துவமும் பின்னர், பிராங்க் போர்ட்டில் மருத்துவமும் படித்தார். *1937* வாக்கில், ஹிட்லரின் நாசி கட்சியில் தன்னை இணைத்துக்கொண்ட மெங்லெ, அதன் பின்னர், அதாவது, *1938*இல் எஸ்.எஸ்.சில் இணைந்தார். எஸ். எஸ். என்பது Schutzstaffel என்பதன் சுருக்கிய வடிவம். ஹிட்லர் காலத்தில், ஜெர்மனியில் பணிபுரிந்த பாதுகாப்புப் படை வீரர்களை இப்படி அழைத்தார்கள். ஆங்கிலத்தில் Protective Squadron.

மெங்லெ ஒருதடவை ரஷ்யாவில் போரில் ஈடுபட்டுக் கொண்டிருந்தபோது காயமடைந்தார். இதனால், அவர், கடமையாற்ற தகுதியற்றவரென நாசி அதிகாரிகளால் அறிவிக்கப்பட்டார். இது ஜோசப் மெங்லேயின் வாழ்க்கையில் முக்கியமான திருப்பத்தை ஏற்படுத்துகிறது. சிறிது





காலம் எதிலும் தன்னை இணைத்துக்கொள்ளாத மெங்லெ பின்னர், யூதர்கள் மீதிருந்த அதீத வெறுப்பின் காரணமாகவும் வன்மத்தின் காரணமாகவும் போலந்திலுள்ள வதை முகாமுக்குச் செல்கிறார்.

அங்கு, எண்ணிலடங்காத யூதர்களை சித்ரவதைக்கு உட்படுத்தி கொலைசெய்கிறார். சிறுவர்கள், ஆண்கள், பெண்கள், பைத்தியக்காரர்கள், தொழு நோயாளர்கள், வயதானவர்கள் என்று, குழந்தைகளைக்கூட விட்டு வைக்காமல் அத்தனை பேரையும், அவர்களனைவரும் யூதர்கள் என்கிற ஒரே காரணத்துக்காகக் கொன்று குவிக்கிறார். யூதர்களை சித்ரவதை செய்யும்போது அவர்கள் எழுப்பும் மரண ஓலம் மெங்லெயை குதூகலிக்க வைக்கிறது.

ஒருதடவை, மெங்லெயிடம் யூத இனத்தைச் சேர்ந்த ஒரு தாயும் மகளும் அகப்பட்டுக் கொள்கிறார்கள். மெங்லே அவர்களிருவரையும் பிரித்துவிடச் சொல்லி கட்டளையிடுகிறார். இரண்டு நாசி வீரர்கள் தாயையும் மகளையும் பிரிக்க முயலும்போது தாய் கோபத்தில் ஒரு நாசி வீரனின் முகத்தை விரல் நகங்களினால் பிறாண்டி விடுகிறாள். தன் கைக் துப்பாக்கியை எடுத்துக்கொள்ளும் மெங்லே அந்த இடத்திலேயே தாயையும் மகளையும் சுட்டுக் கொல்கிறார். அப்போது ஜோசப் மெங்லெக்கு வெறும் முப்பத்து இரண்டு வயதுகளே ஆகியிருந்தன.

இன்னொரு தடவை, நாசிக்கள், யூதக் கைதியொருவனை அழைத்து வந்து அவன் உடலின் தோலை உரித்தெடுக்கின்றார்கள். வலியில் கதறும் யூதனைப் பார்த்து நாசிக்கள் கொண்டாட்டமடைகிறார்கள். அப்போது, ஜோசப் மெங்லெ சக நாசி அதிகாரியொருவரின் பதினான்கு வயது மகனை அழைத்து, அவன் கையில் கத்தி ஒன்றைக் கொடுத்து தோலுரிக்கப்பட்ட யூதனின் இருதயத்தில் சொருகும்படிக்குக்



டாம் சிக்ஸ்

கட்டளையிடுகிறார். சிறுவனும் அச்சொட்டாக அதையே செய்கிறான். யூதனின் இருதயத்திலிருந்து குருதி தண்ணீரைப் போல பிசிறியடிக்கிறது. சுற்றியிருந்த நாசிக்கள் அனைவரும் கைகளை உயர்த்தி கோஷமிடுகிறார்கள். விடிந்ததும், தோலுரிக்கப்பட்ட யூதனின் உடல் நாசி அதிகாரிகளின் நாய்களுக்கு உணவாகப் போடப்படுகிறது.

மெங்லெயின் கொலைகளைக் கேள்விப்பட்டு அவரைத் தன் பக்கத்திலேயே வைத்துக்கொள்கிறார் ஹிட்லர். யூதர்களை விதவிதமாக கொலை செய்வதைப் பார்த்து அவருக்கு ‘மரண தேவதை’ என்கிற பட்டத்தையும் வழங்குகிறார். இதனால், அகங்காரம் கொள்ளும் மெங்லெ, ஒரு கட்டத்தில் தன்னை ஹிட்லருக்கு நிகரான ஒருவராக நினைத்துக்கொண்டு ஆட்டம் போடுகிறார். ‘மனிதப் பூரான்’ என்னும் புதிய சித்ரவதை வடிவத்தைக் கண்டுபிடிக்கிறார்.

அடிப்படையில் மருத்துவரான மெங்லெக்கு யூதர்களை மனிதப் பூரனாக்கும் பரிசோதனையில் வெற்றி கிடைக்கிறது. முதலில் மூன்று யூதர்களிலிருந்து ஆரம்பித்தவர் அந்த குரூரச் சித்திரவதையின் மூலம் மதம் பிடித்தவர் போலாகிறார். முடிவில், ஒரு யூத கூட்டத்தையே மனிதப் பூரனாக்குகிறார்.

மெங்லெயால் பாதிக்கப்பட்ட திபியின் சகோதரர் மெங்லேயைப் பற்றி இவ்வாறு குறிப்பிடுகிறார்: “மருத்துவர் மெங்கல் எப்போதும் திபியின் மீது அதிக அக்கறை கொண்டிருந்தார். அது ஏன் என்று எனக்குத் தெரியவில்லை; ஒருவேளை அவர் பழைய இரட்டையர் என்பதால் இருக்கலாம். மெங்கல் பல நடவடிக்கைகளை திபியின் மீது மேற்கொண்டார். அவரது முதுகெலும்பில் மேற்கொள்ளப்பட்ட ஒரு அறுவை சிகிச்சை என் சகோதரரை முடக்கியது. அவரால் அதன்பின்னர் நடக்க முடியவில்லை. பின்னர் அவர்கள் அவரது பாலியல் உறுப்புகளை வெளியே எடுத்தனர். நான்காவது அறுவை சிகிச்சைக்குப் பிறகு நான் திபியைப் பார்க்கவில்லை. நான் எப்படி உணர்ந்தேன் என்பதை என்னால் சொல்ல முடியாது. அதை வார்த்தைகளில் கூறுவது சாத்தியமில்லை. அவர்கள் என் தந்தை, என் அம்மா, என் இரண்டு மூத்த சகோதரர்களை எடுத்துக்கொண்டார்கள்; இப்போது, என் இரட்டை...”

1948இல் நாசிகளுக்கு எதிரான பனிப்போர் ஆரம்பமாகிறது. நாசி வீழ்கிறது. ஜோசப் மெங்லெ ஜெர்மனியை விட்டுத் தப்பிச் செல்ல முடிவெடுக்கிறார். போலியான ஆவணங்களை சமர்ப்பித்து இவரும் இன்னும் மூவரும் நீர்மூழ்கிக் கப்பலொன்றின் மூலம் தப்பிச் செல்கிறார்கள். இதில் மெங்லெயைத் தவிர மற்ற மூவரும் பிடிபட்டு விடுகிறார்கள். ஆரம்பத்தில் அர்ஜெண்டினாவுக்கு செல்லும் மெங்லெ அங்கு நாசிகளுக்கு ஆதரவான அலையொன்றை உருவாக்குகிறார். தன்னுடைய தந்தையான கார்ல் என்பவரின் தொழிலை எடுத்து நடத்துகிறார். தன்னைப் பிடிக்க ஐசிஆர்சி அதிகாரிகள் வருவது தெரிந்து அர்ஜெண்டினாவிலிருந்து தப்பி பிரேசிலுக்குப் போகிறார். அங்கு முப்பத்தைந்து வருடங்கள் மறைவு வாழ்க்கையை வாழ்கிறார்.

தன் இனத்தின் மீதே கட்டற்ற வன்முறைகளையும் பரிசோதனைகளையும் குரூரத்தையும் நிகழ்த்திய ஈவு இரக்கமற்ற அந்த மனிதர் ஒருநாள் கடலில் குளித்துக் கொண்டிருக்கிறார். பிறகு அவரின் உயிரற்ற உடல் கரையைத் தொடுகிறது. ●

**சாதனா**
**<sathanaa@icloud.com>**



# புதுமைப்பித்தன் நினைவு விருது!

அமெரிக்கத் தமிழர்களின் 'விளக்கு' இலக்கிய அமைப்பின் 23ஆவது (2018) 'புதுமைப்பித்தன் நினைவு' விருதுகள் எழுத்தாளர்கள் பேராசிரியர் ஆ. சிவசுப்பிரமணியன், எழுத்தாளர் பாவண்ணன் ஆகிய இருவருக்கும் வழங்கப்படுவதாக அறிவிக்கப்பட்டுள்ளது. இருவரையும் எழுத்தாளர் திலகவதி, பேரா. சு. சண்முகசுந்தரம், கவிஞர் சமயவேல் ஆகிய மூன்று உறுப்பினர்களைக் கொண்ட நடுவர் குழு தேர்வு செய்துள்ளது.



பேராசிரியர் ஆ. சிவசுப்பிரமணியன், கடந்த நாற்பது ஆண்டுகளாக சமூகவியல், நாட்டுப்புறவியல், பண்பாட்டியல், மானிடவியல் துறைகளில் இயங்கி வரும் ஆய்வாளர். தென் தமிழகத்தின் நாட்டுப்புறக் கதைகள், பாடல்கள், வழக்காறுகளை ஊர் ஊராக அலைந்து சேகரித்தவர். சமூகப் பண்பாட்டு ஆய்வுகளைக்கூட கள ஆய்வுகள் மூலம் செய்த தனித்தன்மை கொண்ட ஆய்வாளர். இவரது கட்டுரைகளும் நூல்களும் தமிழகத்தில் அறியப்படாமல் இருந்த வரலாற்றின் பக்கங்களை வெளிக்கொண்டு வந்தன. ஆஷ் கொலை குறித்தும், கப்பலோட்டிய தமிழர் வ.உ.சி. குறித்தும் இவர் எழுதியுள்ள ஆய்வுரைகள் மிக முக்கியமானவை.

நெல்லை மாவட்டத்தின் கிராமப் புறங்களிலும் கடற்கரைப் பகுதிகளிலும் மக்களிடையே இருந்த வாய்மொழி வழக்காறுகளைத் தொகுத்து, தமிழகத்தின் மக்கள் வரலாறு எழுதுவதற்கு முன்னோடியாகச் செயல்பட்டுள்ளார். 'அடிமை முறையும் தமிழகமும்' (1984), ' ஆஷ் கொலையும் இந்தியப் புரட்சி இயக்கமும்' (1986), 'கிறித்தவமும் சாதியும்' (2001) உட்பட 24 நூல்கள் எழுதியுள்ளார். 'பூச்சியம்மன் வில்லுப்பாட்டு' (1989), 'தமிழக நாட்டுப்புறப் பாடல்களஞ்சியம்' (தொகுதி 10, 2003), 'தமிழக நாட்டுப்புறக் கதைக் களஞ்சியம் (தொகுதி10, 2004) உட்பட ஆறு நூல்களை சேகரித்துப் பதிப்பித்துள்ளார். மேலும் 12 குறுநூல்களும் எழுதியுள்ளார்.

எழுத்தாளர் பாவண்ணன், 1980களில் தொடங்கி தொடர்ந்து ஓயாமல் இயங்கிவரும் அபூர்வமான படைப்பாளிகளில் ஒருவர். சிறுகதை, நாவல், கவிதை, சிறார் இலக்கியம், மொழிபெயர்ப்பு என பல தளங்களிலும் எழுதி வருகிறார். 20 சிறுகதைத் தொகுதிகள், 'வாழ்க்கை ஒரு விசாரணை', 'சிதறல்கள்', 'பாய்மரக் கப்பல்' என மூன்று நாவல்கள், இரண்டு குறுநாவல்கள், 18 கட்டுரைத் தொகுப்புகள் என 50-க்கும் மேற்பட்ட நூல்கள் வெளியாகியுள்ளன.

பணியின்பொருட்டு கர்நாடகத்தில் வசிக்கத் தொடங்கிய நாளிலேயே கன்னடத்தைக் கற்றுக்கொண்ட பாவண்ணன், கன்னடத்திலிருந்து மொழிபெயர்த்தவை மொத்தம் 19 நூல்கள். 'பலிபீடம்', 'நாகமண்டலம்' போன்ற கிரீஷ் கர்நாட்டின் நவீன நாடகங்களையும், லங்கேஷ், வைதேகி, விவேக் ஷன்பாக் போன்றவர்களின் சிறுகதைகளையும், பைரப்பாவின் 'பருவம்', 'வினை விதைத்தவன் வினை அறுப்பான்', தேவனூரு மகாதேவாவின் 'பசித்தவர்கள்', 'ஓம் நமோ', ராகவேந்திர பாட்டீலின் 'தேர்' உள்ளிட்ட நாவல்களையும் அக்கமாதேவி, பசவண்ணர் என கன்னடத்தின் ஆதி கவிகள் தொடங்கி இன்றைய நவீன கவிஞர்கள் வரையிலும் தமிழில் வாசிக்கும் வாய்ப்பு நமக்கு பாவண்ணனின் மொழியாக்கத்தின் வாயிலாகவே சாத்தியமானது.

கவிதையிலிருந்து தன் எழுத்து வாழ்க்கையைத் தொடங்கியவர், பாவண்ணன். தமிழ் மரபிலக்கியத்தில் பெரும் ஈடுபாடு கொண்டிருந்த அவர், கபிலர் தொடங்கி ஆவுடையக்காள் உள்ளிட்ட பல கவிஞர்கள் குறித்தும் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

ஆ. சிவசுப்பிரமணியன், பாவண்ணன் இருவருக்கும் அம்ருதாவின் வாழ்த்துகள். ●

# வேலை தந்த தேவதை



நடேசன்

**யாழ்ப்பாணம்**

"நீ தீவான், ஆர்ட்ஸ் படித்து என்ன செய்யப்போகிறாய்? இந்துக் கல்லூரிக்கு எஞ்ஜினியரிங் படிப்பதற்கு எல்லோரும் வருகிறார்கள்" என்று பொன்னம்பலம் மாஸ்டர் முகம் சிவந்த கோபத்துடன், எனது இடக் காதை பிடித்துத் திருகியபடி, ஒன்பதாவது வகுப்பில் கலைப் பிரிவில் இருந்த என்னை பாடசாலை வராந்தாவில் இழுத்துக்கொண்டு போய், இரண்டு வகுப்பறைகள் தள்ளியிருந்த கணிதப் பிரிவில் இருக்கும்படி கட்டளையிட்டார்.

உயரமானவர். எனது எட்டாம் வகுப்பில் தமிழாசிரியர். எனது தந்தையைத் தெரிந்த ஆசிரியர். அத்துடன் எங்கள் குடும்பத்தில் கொண்டும் கொடுத்த பக்கத்தூரான அனலைதீவைச் சேர்ந்தவர். அவரிடமே என்னை பார்த்துக்கொள்ளும்படி தந்தை சொல்லியிருந்தார் எஞ்ஜினியராக வரவேண்டுமென்ற அவரது ஆசைக்காக நான் கணிதத்தோடு இரண்டு வருடங்கள் போர் நடத்தினேன். சிரியப் போர் மாதிரி உள்நாட்டுப் போர். ஆனால், வெளிசக்திகளின் தேவைக்காக. "பிற்காலத்தில் என்னைக் கணிதத்திற்கு பொன்னம்பலம் மாஸ்டர் மாற்றியது தவறு; எனது உண்மையான ஊக்க சக்தி அவரால் மழுங்கடிக்கப்பட்டதே' என பல தடவைகள் புழுங்கினேன்.

இக்காலத்திலும்கூட இலங்கை, இந்தியா மட்டுமல்ல, பெரும்பாலான கீழைத்தேச நாடுகளில் பெற்றோர்கள் மற்றோர்களது விருப்பங்களை பிள்ளைகளில் திணிக்கும்போது எவ்வளவு குழந்தைகளது ஆக்கபூர்வமான ஊக்கசக்தி வீணாகிறது என்பது நமக்குப் புரிவதில்லை. ஆனால், நான் கற்ற வரலாற்றுப் பாடம் எனது பிள்ளைகள் விடயத்தில் உதவியது.

இன்று நான் நினைப்பதுண்டு. பிள்ளைகளை அவர்களுக்கு பிடித்த துறையில் விடாததுதான் நமது நாடுகள் வளராமல் தள்ளாடுவதன் முக்கிய காரணமாக இருக்கலாமோ? பிள்ளைகளிடம் ஏற்கனவே சுமத்தப்பட்ட சுமைகளான மொழி, மதம், சாதி, கலாசாரம் என்பதற்கு மேலாக எமக்கு விருப்பமான கல்வித்துறைகளையும் அவர்கள் தொண்டையில் பலாப்பழமாகத் திணிக்கிறோம்.

அதேநேரத்தில் நானும் சட்டம் படித்து கறுப்புச் சட்டைபோடும் சட்டத்தொழில் செய்திருந்தால், தற்போதைய இலங்கைத் தமிழ் அரசியல்வாதிகள்போல், மக்களை உச்சும் அரசியலோ இல்லை திருடன் - கொலைகாரன் - கஞ்சாக் கடத்துபவனுக்காகவோ வாதிட்டிருப்பேன். சூரனைக் கொலை செய்தபோது அவனை சேவல் கொடியாக்கிய முருகன்போல் இப்படியான செயல்களிலிருந்து பொன்னம்பலம் மாஸ்டர் காத்து அருளினாரே என்ற எண்ணமும் மழை இருட்டில் மின்னலாக இன்றுவரை வந்துபோகத் தவறுவதில்லை.

யாழ் இந்துக் கல்லூரியில் எனது முதல் வருடம், திருவிழா கொண்டாட்டத்துக்குள் புகுந்த சிறுவனின் நிலையில் இருந்தது. அதுவரையும் ஒரு சில தடவைகள் வைத்தியர்களை சந்திப்பதற்காக சென்று வந்த யாழ்ப்பாணம், என்னை பொறுத்தவரையில் புது உலகமாக விரிந்தது. பெற்றோர் உறவினரது மேற்பார்வைகள், கண்டிப்பு மற்றும் அச்சுறுத்தலற்ற சுதந்திரக் காற்றை சுவாசித்தேன்.

எனது கல்வி மூன்றாமிடத்திற்கு தள்ளப்பட்டது. கல்லூரி விடுதிக்கு வந்த முதல் மாதத்தில் எனது தந்தை வந்து எனது ஊர் நண்பனுடன் "காவல்காரன்' சினிமாப்படத்திற்கு அழைத்துச் சென்றார். அன்றிலிருந்து என்னால் எம்ஜிஆரை நடிகராக ரசிக்க முடியவில்லை. சிவாஜிகணேசனின் ரசிகனாகியதுடன் அவரது படங்களை முதலாவது நாளில் பார்க்கும் நண்பர்களின் அணியில் சேர்ந்தேன். அக்காலத்தில் எனது மனதில் சினிமாத் திரையரங்கத்தில் வேலை பார்ப்பதே பிற்காலத்தில் செய்யவிரும்பிய தொழில் விருப்பமாக உருவாகியது.

இரவில் இந்துக் கல்லூரியில் இருந்து கிணற்றருகே தண்ணீர்க் குழாய் அமைந்த மதிலின்மேல் ஏறி, கண்ணாடி துண்டுகள் பதியப்பட்ட மதிலுக்குமேலால் பாய்ந்துசெல்லும் பயிற்சியும் பெற்றேன். பகலில் மதியம், மாலை என கிரிக்கெட் விளையாடுவதே அக்காலத்தின் இலட்சியமாகியது

எட்டாவது வகுப்பின் இறுதியில் கலைப் பாடங்களில் நான் பெற்ற புள்ளிகள் இமயமலையாகவும் கணிதத்தில் பெற்றது கீரிமலையாகவும் தோன்றியது. அதனால்தான், நான் கலைப் பட்டதாரியாகி சட்டம் படிக்க வேண்டுமெனத் தீர்மானித்துச் சென்றபோது, பொன்னம்பவாணரால் தடுத்தாட் கொள்ளப்பட்டேன்.

மற்றும் ஒரு முறையும் பொன்னம்பலம் மாஸ்டர் எனது வாழ்வில் வந்ததை நன்றியுடன் நினைவு கூரவேண்டும். யாழ் இந்து கல்லூரி விடுதி மட்டுமல்ல பாடசாலையே ஆண் குருவானவர்களது செமினறி போன்றதுதான். பிற்காலத்தில்




பெண் லைபிரரேரியன் வந்தபோது நாங்கள் அடைந்த இன்பம் சொல்லி மாளாது. எப்பொழுது கையைத் தூக்குவார், எப்பொழுது குனிவார் என்பதற்காகவே லைபிரறி சென்றோம். இந்துக் கல்லூரியில் எதிர்பாலுடன் எப்படி பழகுவது எனத் தெரியாமல் வளர்தோம். கூட்டுக் கல்வி எவ்வளவு முக்கியமானது என்ற விடயம் பல்கலைக்கழகம் சென்ற பின்பே உறைத்தது.

எனது காலத்தில் நியுபோடிங் என்ற விடுதி ஆறிலிருந்து எட்டாம் வகுப்பு வரையான பையன்கள் தங்குமிடம். அதன் கீழ் எங்களது உணவுக் கூடம். நியுபோடிங் அடுத்ததாக ஓல்ட்போடிங் என்ற மரத்திலான தரையுள்ள விடுதி. இரண்டிற்கும் பொதுவான மாடிப்படிகள் உள்ளன. அங்கே ஒன்பதிலிருந்து பத்தாம் வகுப்பு வரையில் உள்ள மாணவர்கள் தங்கினார்கள். அதற்குக்கீழே பதினொன்று மற்றும் பன்னிரண்டில் படிக்கும் உயர்தர மாணவர்கள் இருப்பார்கள். நிர்வாகம் நல்ல நோக்கில்தான் வயதடிப்படையில் மாணவர்களைப் பிரித்து வைத்தது. ஆனால், இரவில் நல்ல நோக்கம் பிசுபிசுத்து விடுகிறது. இரவு பன்னிரெண்டு மணிக்குப் பின்பு ஓல்ட்போடிங்கில் உள்ள சிலர் நீயு போடிங்கை தங்களது சிவப்பு விளக்கு பகுதியாக நடத்த விரும்பினார்கள்.

இரவுகளில் மரத்தரையான ஓல்ட் போடிங்கில் அதிக ஓசையுடன் ஒலிக்கும் காலடியோசைகள், நியூபோடிங் சிமெண்ட் தளத்தில் தேய்ந்து ஒலிக்கும். அது இருட்டில் பேய்கள் அசைவதைத் தெரிவிக்கும். எங்களுக்கு இதயத் துடிப்பு அதிகமாகி காகித உறையின் முத்திரையாகக் கட்டிலில் ஒட்டிக்கொள்வோம்.

பெரும்பாலான நியுபோடிங் பையன்கள் வயதுக்கு வராத நான்கு மாத புரலைர் குஞ்சுகள் மாதிரி. ஆனால், ஓல்ட் போடிங்கில் உள்ளவர்கள் சேவலாக புதிதாகக் கூவியவர்கள்.

என்னை ஒரு பேய் இருட்டில் தேடிவரும். அந்தப் பேயைத் தவிர்க்க பலதடவை ஓடி ஒளித்து, இறுதியில் அந்த வயதிலே கடவுளைக் கும்பிடாத, நான் அண்ணே ஆளைவிடுங்கள் எனக் கும்பிட்டுப் பார்த்தேன். எனது தொழுகையில் மனம் மாறி இரக்கமடைந்து அந்தப் பேய் என்னை விட்டுவிட்டது.

ஆனால், மற்றொரு பேய், விடுதியில் வசிப்பதில்லை, என்னைப் பாடசாலை மைதானங்களில் துரத்தியபோது, இறுதியாக என்னைக் காப்பாற்ற வழி தெரியாமல் பொன்னம்பலம் மாஸ்டரிடம் போய் பாஞ் சாலியாக சரணடைந்தேன்.

அவருக்கு கிருஷ்ணன் போன்று சக்தியற்றதால் அவர் அந்தப் பேயின் வகுப்பாசிரியரும் எழுத்தாளருமான சொக்கன் எனப்படும் சொக்கலிங்கம் மாஸ்டரிடம் சென்றார். அடுத்த நாள் சொக்கன் இருவரையும் இந்துக் கல்லூரி பிரார்த்தனை மண்டபத்திற்கு அழைத்து, அந்தப் பேயிடம், “டேய் உனக்கு வேண்டுமென்றால் உன்னை விரும்பும் ஒருவனைப் பாரடா; ஏன்டா விரும்பாதவனை கஸ்டப்படுத்துகிறாய்” என்றார்.

அந்த உருவம், அன்றைய அவமானத்திற்கு, எப்பொழுதும் என்னைப் பழிவாங்கலாம் என்ற பயம் பலகாலமிருந்தது. பின்பு அந்த உருவத்தைத் துணிவுடன் பார்ப்பதற்கு இரண்டு வருடங்கள் எடுத்தது. பாலுணர்வு மனிதர்களை எவ்வளவு கீழ்த்தள்ளும் என்பதை உணர்த்திய இந்த சம்பவம் எனக்கு பிற்காலத்தில் ஒரு படிப்பினையாக இருந்தது.

## அவுஸ்திரேலியா

புதிதாக அவுஸ்திரேலிய பல்கலைக்கழகத்தில் ஒரு பட்டம் கிடைத்தது என மகிழ்ந்தாலும் பட்டம் சோறு போடாது, குடும்பத்தைப் பராமரிக்க முடியாது என்ற உண்மை, படியாத காளையாக வயிற்றில் உதைத்தது.

படிக்கும் வரையும் குடும்பம், மனைவியின் சகோதரனோடு ஒட்டுண்ணியாக வாழ்வதை அனுமதித்த எனது தன்மானம், படித்துமுடித்தபின் தடுத்தது. எனது ஈகோவிற்கப்பால் அவனுக்குத் திருமணம் பேசினார்கள். புதிதாக ஒரு இடத்தைத் தேட நினைத்தபோது, இலங்கைத் தமிழர்கள் வாழும் பகுதியான கோம்புஸ் என்ற சிட்னியின் மேற்குப் புறநகரில் குடியிருப்பைத் தேடினோம்.

அங்குள்ள பாடசாலை நல்லதென்பதால் அந்த பகுதியை தெரிவு செய்தோம். அந்த ஃபிளாட்டின் வாடகைக்கு அரச உதவிப் பணத்தில் 60 வீதம் போய்விடும். எனது வேலைக்கு ஆய்வுக் கூடங்கள், பல்கலைக் கழகங்கள் என அனுப்பிய விண்ணப்பங்கள் சுவரில் எறிந்த பந்தாக பதிலுடன் வந்தன.

நம்மவர்கள் கடிதங்களை, பதவி விண்ணப்பங்களை செய்தித்தாள் புதினமாகப் பார்த்து கடந்துவிடுவார்கள். அவுஸ்த்திரேலியர்கள் அப்படியல்ல. உடனுக்குடன் மிகவும் கனிவாக நன்றி தெரிவித்து பதில் போடுவார்கள். இப்படி நிராகரிக்கப்பட்டு 50 கடிதங்கள்

வரையும் சேர்ந்ததும் இது சரி வராது என நினைத்து, நேரடியாக சிட்னியின் தொழிற்சாலைகளுக்குப் பாதயாத்திரையாக இறங்கினேன். எனது அதிர்ஸ்டம் அப்படிச் சென்ற முதலாவது இடம் பிரித்தானிய பெயின்ட்கள் தயாரிக்கும் தொழிற்சாலை. நேரடியாக ஆட்களை நிர்வகிக்கும் மனேஜரின் அறைக்கு அனுப்பினார்கள். யாரோ வயதான ஒரு மனிதரிடம் எப்படிப் பேசுவது? என்ன கேட்பார்கள் ? எப்படி பதில் தரவேண்டும்? என மனதில் உருப்போட்டபடி சென்றேன்.

எதிர்பார்க்காத மாதிரி நெருப்பின் நிறத்தலையுடன் நீலக்கண்ணுடன் இருந்த பெண் எனது கோப்புகளைக் கையில் வாங்கி ஆனால், விரித்துப்பார்க்காமல், "இன்றே இணைந்துகொள்ள முடியுமா?" என்றாள்.

ஒரு தேவதை எனக்காக அந்த அறையில் எழுந்தருளி வரம் தந்தது போன்ற புளகாங்கிதத்துடன், மயிர்கூச்செறிய, நான் உடனே சம்மதித்ததும், அவளே என்னை ஒரு அறைக்கு அழைத்துச் சென்று மடிப்புக்குலையாத காக்கி ஓவரோலைத் தந்தாள். இதுவரை வெள்ளை கோட்டை அணிந்தவன் புதிதாகக் காக்கி அணந்தேன். ஓவரோலை நான் போடுவதற்காக வெளியே சென்றவள் வரும்போது எனது நியமன கடிதத்தோடு காத்திருந்தாள்.

எனது வேலை பெயின்ட்டுகளின் நிறங்களைக் கலக்குவதற்கான இரசாயனக் கூழை தயாரிக்கும் இயந்திரங்களில், தூளான இரசாயனங்களைக் கொட்டி அனுப்புவதும், அவற்றின் வெப்ப அமுக்கத்தை மேற்பார்வை பார்ப்பதும், வெளிவரும் கூழைத் தகரப் பீப்பாய்களில் நிரப்புவதுமாகும்.

உடல் முறியும் வேலையில்லை. எனது எட்டுமணிநேர சிஃப்ட் மாலை வேளையில் வரும். என்னுடன் ஒரு ஆங்கிலேயரும் போலந்து நாட்டவரும் வேலை செய்தார்கள். பல்கலைக்கழகத்தில் படித்தவன் என்பதால் கண்ணியமாக நடத்தினார்கள். தொழில்கற்று தந்தார்கள். என்ன ஒவ்வொரு முறையும் துசண வார்தையுடன் சேர்த்தே எனது பெயரை அழைப்பார்கள். ஆரம்பத்தில் கேட்பதற்குக் கடினமாக இருந்தது. பின்பு அதுவே சங்கீதமாகியது. அதிலும், ஆங்கிலேயனான மார்க் தனது யோக்சயர் கடினத் தொனியோடு அழைப்பது கிரிக்கெட் விளையாட்டுக்காரர் ஜெவ்ரி போய்க்கெட்டின் வர்ணனையைக் கேட்பதுபோல் இருக்கும்

எமது தமிழர்கள் அரசியலும் சினிமாவும் போலஅவர்கள் வாழ்விலும் இரண்டு விடயம் முக்கிய பேசுபொருளாகிறது. ஒன்று கார் பற்றியது; விதம் விதமான கார்களைப் பற்றி பேசுவார்கள். அதைவிட பெண்கள். இளமையில் அவர்களது சாகசங்கள் காற்றில் தவழும். என்னால் பெண்களைப் பற்றிய பேச்சுகளை ரசிக்க முடிந்தது. ஆனால், கார்கள் பற்றிய தொழில்நுட்ப விடயம் புரியவில்லை. என்னிடம் கார் இருக்கவில்லை. பஸ்சில் வேலைக்குப்போவேன். போலந்துகாரர் என்னை வீட்டில் விடுவர்.

ஐந்து நாட்கள் வேலையைவிட ஞாயிற்றுக்கிழமைகளில் ஓவர்ட்ரைம் கிடைக்கும். அந்தக் காலங்களில் என்னை ஒரு பணக்காரனாக நினைக்க வைத்த ஊதியம். அவுஸ்திரேலியவில் சுரங்க தொழிலாளிகளுக்கு அடுத்ததாக வேதனம் கொடுப்பது இரசாயன தொழிலாளர்களுக்கே. இரண்டு பிரிவினரும் அதிகம் வாழ்வதில்லை. என்னுடன் வேலை பார்த்த ஒரு தொழிலாளி, தனக்கு வேர்க்கும்போது அந்த வேர்வை மஞ்சள் நிறத்தில் இருக்கும் என்றார்.

கொதித்தபடி வரும் அந்த இராசாயனக் கூழை பீப்பாய்களில் அடைத்து, அவற்றை மூடும்போது வரும் ஆவி முகமூடியைக் கடந்து, எனது சுவாசத்தில் புகுந்து, விஸ்கியாக கிக்கேற்றும். முகத்தைத் திருப்பியபடி வேலை செய்யப் பழகிக்கொண்டேன்.

மூன்று மாதங்கள் வேலை செய்துகொண்டிருந்தேன். எப்பொழுதோ போட்ட விண்ணப்பத்திற்கு சிட்னியின் மேற்கு பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்சி வேலைக்கு தெரிவு செய்திருப்பதாக கடிதம் வந்தது. அதில் குறிப்பிட்டிருந்த எனது வேதனம் தொழிற்சாலையில் எனக்குக் கிடைப்பதில்



அரைவாசியாக இருந்தது. என்ன செய்வது? மத்தியதர வர்க்கத்தின் மனப்பான்மையுடன் வேலை தந்த தேவதைக்கும் எனது சகாவான மார்க்கிற்கும் போலந்து ரெவ்வானுக்கும் நன்றி சொல்லிய பின்பு அந்த தொழிற்சாலையை திரும்பிப் பார்த்தபடி வெளியே வந்தேன்.

### இந்தியா

அடுத்த நாள் மாலையில்தான் சென்னைக்கு ரயிலில் பிரயாணம் செய்ய முடியும் என்பதால் இரவு இராமேஸ்வரத்தில் தங்க வேண்டும். பத்து ரூபாய்க்கு ஒரு ஹோட்டல் அறை, அந்த இரவு தங்குவதற்கு கிடைத்தது மிகவும் ஆச்சரியமானது.

இலங்கையில் சாமானியர்கள் தங்குவதற்கு வசதியான இது போன்ற ஹோட்டல்கள் இல்லை. எங்கள் காலத்தில் யாழ்ப்பாணத்தில் தங்கும் வசதியுள்ள ஹோட்டல்கள் இருந்ததாகத் தெரியாது. இராமேஸ்வரத்தில் அன்று எனக்குக் கிடைத்த அந்த அறை குளியல் அறையுடன் சுத்தமானதாக இருந்தது. படுப்பதற்கு சிறிய கட்டிலும் எனது தேவைக் கேற்றபடியாக இருந்தது.

காலையில் எழுந்தபோது எப்படியும் பன்னிரண்டு மணி நேரமாவது இங்கு தங்கவேண்டும். இந்த ஊருக்கு வந்தோம், குறைந்தபட்சம் இராமாயணத்தில் இடம்பெற்ற கோயிலையாவது பார்ப்போம் என நடந்துசென்றேன். அதிக தூரமில்லை. அப்படி ஒரு



பெரிய கோயிலை அதற்கு முன்னர் வாழ்க்கையில் பார்த்ததில்லை.

இராமேஸ்வரத்தில் கோயிலின் மண்டபங்கள், தூண்களைப் பார்த்துக் கொண்டிருந்தபோது, உடல் பருத்த கருமையான மனிதர் ஒருவர், அரையில் கட்டிய அழுக்கான வேட்டியுடன், கறுத்தநிற பானை வண்டியுடன் என் முன்தோன்றி, கங்கா தீர்த்தம் எனச்சொல்லி சிறிய செம்பில் தண்ணீர் தந்தார்.

இதுபோன்ற தீர்த்தத்தில் நம்பிக்கை இல்லாதபோதும் தந்தவர் மனம் கோணாமல் இருக்கவேண்டும் என்பதால் அதைக் குடித்ததும், மீண்டும் ஒரு கிணற்றில் இருந்து செம்பு நிறைந்த தண்ணீரை எடுத்துத் தந்து, சரஸ்வதி தீர்த்தம் என்றார். அதனையும் மறுக்க முடியவில்லை. தொடர்ச்சியாக இப்படி கிட்டத்தட்ட இருபத்தைந்து தீர்த்தங்கள் குடித்தேன்.

அந்த மனிதர் கோயிலை தரிசிப்பதற்கு எனக்கு இடம் தரவில்லை. உடல்மொழியால் மற்றும் உதாசீனத்தால் அந்த மனிதரைப் புறந்தள்ள முடியவில்லை. துணியில் பட்ட மசாலா குழம்பின் மஞ்சள் கறையாக என்மீது அவர் ஒட்டிக் கொண்டார்.

முதல்நாளே புதியநாட்டில் ஒருவருடன் கடுமையாகப் பேசி முகம் முறிக்க முடியவில்லை. “முகத்தை முறிக்காத பெண்ணுக்கு காலம் முழுவதும் வயிற்றிலே குழந்தை' என்பதுபோல் எனக்கு தண்ணீர் குடித்தே வயிறு நிரம்பிவிட்டது. அந்த மனிதருக்கும் மூச்சு வாங்கியும் விடவில்லை. மனிதர் கடைசியில் கோயிலின் வெளியே வந்துதான் ஓய்ந்தார். மனதில் அவரை பலதடவை கொலை செய்துவிட்டேன்.

இலங்கையில் நுவரெலியா பொலிஸிடம் அகப்பட்டிருந்தால் பரவா யில்லை என அன்றைய சம்பவம் நினைக்க வைத்தது. கடைசியில் அவர் என்னிடம் இருபத்தைந்து ரூபாய் கேட்டபோது கொடுக்க மறுத்தேன். தந்த தண்ணீருக்கு விலையா ? நான் தண்ணீர் கேட்கவில்லையே என்று கூறியும் பிரயோசனம் இல்லை. அந்த விடாக்கண்டனுக்கு பத்து ரூபாயைக் கொடுத்து விட்டு இனிமேல் கோயில்களுக்கே செல்வதில்லை என எச்சரிக்கையாக இருந்தேன். இந்தக் கொள்கையை பிற்காலத்தில் இந்தியாவில் இருந்த மூன்று வருடங்களும் கடைப்பிடித்தேன். சிதம்பரம், மதுரை, திருச்சி என சென்ற போதெல்லாம் கோயில்களைத் தவிர்த்தேன். மனைவி, பிள்ளைகள் உள்ளே சென்றால் நான் அவர்களது காலணிகளுக்கு காவல்காரனாகினேன்.

இலங்கையில் எந்தக் கோயில்களிலும், எனக்கு நம்பிக்கை யில்லாவிடிலும் அங்கு செல்லும் பழக்க உள்ள நான், இந்தியாவில் கோயில்களை தவிர்த்தேன்.

அன்றைய தினம் இராமேஸ் வரத்தில் விரைவாகவே அறைக்குத் திரும்பி வந்து படுத்தவாறு பழைய விடயங்களையும் அரசியல் புதினங்களையும் அசைபோட்டேன். தனிமையில் இருக்கும்போது நினைவுகள் மட்டும்தானே நம்மோடு வரும்.

காங்கேசன்துறை வீதியில்தான் இந்துக்கல்லூரி உள்ளது. மேல் மாடியில் நின்றால் எங்களுக்கு நேர் கீழே வீதி தெரியும். எழுபதுகளில் ஒரு நாள் மாணவர் பேரவையின் ஊர்வலம் போவதாக கேள்விப்பட்டேன். யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரியின் தாவரவியல் பரிசோதனைச்சாலை சென்றபோது எனது சகவகுப்பு மாணவர்கள் உடன் வந்தார்கள். வீதியிலே ஏனைய பாடசாலைகளின் சிரேஷ்ட மாணவர்கள் கொடும்பாவிகள் சகிதம் தாரை தப்பட்டைகளுடன் ஊர்வலம் போனார்கள். ஊர்வலத்திற்கு பொலிஸ் அனுமதியில்லை. எப்படியும் ஊர்வலத்தில் போனவர்களுக்கு பொலிசால் அடிவிழும் எனப் பலரும் பேசிக்கொண்டார்கள்.

பரிசோதனைச் சாலையில் நாங்கள் நின்று யன்னல் வழியே ஊர்வலத்தில் எமது பாடசாலையைச் சேர்ந்தவர்கள் யாராவது போகிறார்களா என பார்த்தேன். அப்போதைய கல்வி அமைச்சர் பதியுதீன் முகமத்தை போன்று வைக்கோலினால் செய்யப்பட்ட கொடும்பாவியை சிலர் தூக்கிக் கொண்டு சென்றார்கள்.

எனக்கு ஆச்சரியம்

தரும்வகையில் எனது சக மாணவனாகிய செல்வவடிவேல் கையில் ஒரு உடுக்கையை தட்டியபடி, மாடியில் நிற்கும் எம்மைப் பார்த்து சிரித்தபடி, அந்த கொடும்பாவியின் பின்னால் போய்க் கொண்டிருந்தான். அவன்மீது எனக்கு அப்போது பரிதாபம்தான் தோன்றியது.

தம்பி பொலிசிடம் நல்ல அடி வேண்டப்போறான் என்று கவலைப்பட்டேன். மறு நாள் எந்தவொரு பாதிப்பும் இல்லாமல், காயங்கள் இன்றி, நிமிர்ந்த நேர்கொண்ட பார்வையுடன் அவன் என்னைச் சந்தித்தபோதுதான் எனது கவலை தீர்ந்தது.

எங்கள் வகுப்பில் பெரும் பலானவர்களுக்கு எந்த மாதிரியான தரப்படுத்தல் வந்தாலும் நாம் பல்கலைக்கழகம் போக முடியும் என்ற நம்பிக்கை இருந்தது. மற்றைய சிலர் இலங்கையில் பல்கலைக்கழகம் போக முடியாவிடில் இந்தியா அல்லது இங்கிலாந்து சென்று படிக்க முடியும் என்ற நம்பிக்கையுடன், வசதியுடன் இருப்பவர்கள். இந்த மன நிலையில் ஊர்வலம், போராட்டம் குறித்து எமக்கு நம்பிக்கை இருக்கவில்லை. மேலும், ஆர்ப்பாட்ட ஊர்வலம் சென்று அடிவாங்கும் அளவுக்கு உடம்பிலும் பலமும் மனதில் தைரியமும் இருக்கவில்லை. இந்த நிலையில் சக மாணவ நண்பன் செல்வவடிவேலை அந்த ஊர்வலத்தில் கண்டது மிகவும் ஆச்சரியத்தைத் தந்தது.

செல்வவடிவேல் வித்தியாச மாக சிந்தித்து ஊர்வலம் போனான் என்பதுடன் அவனது அன்றைய சிரிப்பு இன்றளவும் எனது மனதில் நினைவாக தங்கியிருக்கிறது. எப்பொழுதும் வித்தியாசமானவர்கள் மாறுபட்ட நிகழ்வுகள் மனதில் அழுத்தமாக படியும். சாதாரணமான விடயங்களும் நாளாந்தம் சந்திப்பவர்களின் நினைவுகளும் மனஓடையில் ஓடும் நீர்போல் கடந்து போய்விடும் என்பதும் நியதிதானே.

போராட்டம் எனவரும்போது ஏராளமானவர்கள் அதை தவிர்க்கத்தான் விரும்புகிறார்கள். ஓடி தப்பிவிட முயலுகிறார்கள். ஆனால், சந்தர்ப்பமும் சூழ்நிலையும் அவர்களை அதில் இழுத்து விட்டுவிடுகிறது. எமது வகுப்பில் இருபது பேரில் அன்று ஒருவன் ஊர்வலத்துக்கு சென்றதுபோல் 95 வீதமானவர்கள் அன்று அந்த ஊர்வல போராட்டத்தை முடிந்தவரை தவிர்க்கவே விரும்பினார்கள். காரணம் பலருக்கு வாழ்க்கையே போராட்டமாக இருந்தது.

இதே வேளையில் போராட்டத்தின் வாடையே தம்மீது படியாமல், வாய் சொல்லால் உசுப்பேற்றியவர்கள் அக்காலத்திலும் இருந்தார்கள். எனக்குத் தெரிய வண்ணை ஆனந்தனின் பொறிபறக்கும் பேச்சுகள், காசிஆனந்தனின் இரத்தத்திலகங்கள் அன்றைய காலகட்டத்தில் எப்படி உறைந்த இரத்தங்களை கொதிக்க வைத்தது என்பது எனது வயதுக்காரருக்குத் தெரியும். ஆனால், இப்போதைய இணையத்தில் ஆயிரக்கணக்கில், இலட்சக் கணக்கில் ஆனந்தன்கள் இருக்கிறார்கள். அக்காலத்தில் குறைந்தபட்சம் மக்கள் மத்தியில் வந்துபேசவேண்டும், சிறைவாசமும் அனுபவிக்கவேண்டும்.

நான் சொல்லும் 70ஆம் ஆண்டு காலகட்டத்தில் அரசியல் என்பது நிழலாக எம்மைத் தொடர்ந்தது. நிழலுக்கு ஓடி மறைய முடியாது என்பதுபோல் இடைவிடாமல் துரத்தியது. குடியரசு தினங்களில் பாடசாலைக்கு செல்லாதது மட்டுமல்ல மற்றவர்களையும் அப்படி செய்யத் தூண்டுவது எமது ஆரம்ப செயலாக தொடர்ந்து நடந்தது. இதில் இரண்டு சம்பவங்கள் மனதில் நிற்பவை. ஒன்று எனது நண்பன் சொன்னது. நான் நேரடியாக சம்பந்தப்படாதது.

“முதலாவது குடியரசு தினத்தில் வைத்தீஸ்வரா பாடசாலையில் மாணவர்கள் பாடசாலையை பகிஷ்கரித்தபோது தலைமை ஆசிரியர் மணவர்களை அமைதியாக உள்ளே வரும்படி கேட்டுக்கொண்டார். ஆனால், பகிஷ்கரிப்பை ஒழுங்கு படுத்தியவர்கள் பாடசாலைக்கு கல்லெறிந்தபோது அந்த வழியால் சைக்கிளில் வந்த முதியவர் ஒருவர் “தம்பிமாரே படிக்கிற பாடசாலைக்கு ஏன் கல்லெறிகிறீர் கள்? அப்படி கல்லெறிய வேண்டு மானால் இந்தா போகிறதே அரசின் இலங்கை போக்குவரத்து சபை பஸ் வண்டி. அதற்கு எறியுங்கள்’ என்றார்.

இது எப்படி இருக்கிறது?

யாவோ (Yehovah) கொடுத்த அருள்வாக்கின் பிரகாரம் இஸ்ரேலியர்களை எகிப்தில் இருந்து வெளியேற்றும் மோசஸே (Moses) வெளியேற்றினார். அதுபோல் அன்று பெரியவரின் அருள்வாக்குப் பிரகாரம் பாட சாலையை பதம்பார்த்த அந்தக் கல்லுகள், போக்குவரத்துச்சபை பஸ் வண்டிகளை நோக்கி எறியப்பட்டது. நானறிந்தமட்டில் அரசியல் காரணங்களுக்காக அதுதான் யாழ்ப்பாணத்தில் நடந்த முதலாவது கல்வீச்சு சம்பவம் என நினைக்கின்றேன். அதன்பின்பு யாழ்ப்பாணம் குடாநாடெங்கும் இலங்கை போக்குவரத்து சபைக்குச் சொந்தமான பஸ் வண்டிகள் சேவையில் இல்லாமல் போகும் வரையும் கல்லெறிந்து உடைத்து, எரித்தது எமது வரலாறு.

இரண்டாவது சம்பவம், 75 ஆம் ஆண்டு என நினைக்கிறேன். யாழ்ப்பாணம் இந்துக் கல்லுரி மாணவர்கள் குடியரசு தினத்தில் கல்லுரியை பகிஷ்கரித்தார்கள். அது எங்களுக்கு இலகுவாக வரும் போராட்ட முறையாகும். நாங்கள் ஒழுங்காகப் படிப்பது வெளியே ரீயுசனில்தான். எங்கள் காலத்தில் ஒழுங்காக பாடசாலையில் படிப்பித்த பிரான்சிஸ் மாஸ்டர் வெளியே டியூட்டரி வைத்து எங்களைப் படிப்பித்தார். ஆனால், சென்ஜோன்ஸ் கல்லுரரி மாணவர்கள் பகிஷ்கரிப்பில் ஈடுபடுவதற்கு விரும்ப மாட்டார் கள். காரணம் அங்கு அவர்களுக்கு கல்லுரியில் ஒழுங்காக படிப்பித்தார்கள்.

இந்துக் கல்லூரி மாணவர்கள் முற்றாக பகிஷ்கரித்ததால் ஒருவித வெற்றிப் பெருமிதத்துடன் சென்ஜோன்ஸ் பக்கம் நடப்பதைப் பார்பதற்காக ஒரு நண்பன் சுந்தரேசனோடு சைக்கிளில் சென்றேன். சுந்தரேசன் சிறிது குள்ளமானவான். சைக்கிளை நிறுத்திவிட்டு மதில்மேல் ஏறி எட்டிப் பார்த்தான். அவனது கெட்டகாலம் பின்னால் பொலிஸ் ஜீப் வந்து நின்றது. இருவரையும் நாலு பொலிஸ் கான்ஸ்ரபிள்களும் ஒரு இன்ஸ்பெக்ரரும் சுற்றி வளைத்தார்கள்.

நாங்கள் பயந்தபடி, விறைத்துப்

போனோம்.

மதிலோடு நின்ற சுந்தரேசனை, "என்னடா எழுதினாய்?" என்று தலைமயிரில் பிடித்தபடி அரைகுறைத் தமிழில் கேட்டார் அந்த இன்ஸ்பெக்ரர்.

அந்த மதிலில், "குடியரசு தினத்தை பகிஷ்கரிப்போம்" என சிவப்பு மையால் ஆங்கிலத்தில் ஏற்கனவே கொட்டை எழுத்தில் எழுதப்பட்டிருந்தது.

"யா, நான் எழுதவில்லை" என்றான் சுந்தரேசன்.

பொலிஸ் இன்ஸ்பெக்ரர் அவனை அடிக்க கையை ஓங்கிய போது "ஐயா இது சரியில்லை' என்றான். அவனது முகத்தில் தோன்றிய உணர்வை வர்ணிக்க முடியாது. சுருக்கமாக சொல்வதானால் அவனது முகம் பயத்தில் பேயறைந்தவன் போலாகியது. வாழ்க்கையில் அந்தமாதிரியான பயத்தை முகத்தில் தேக்கியவாறு ஒருவர் அடியை தவிர்க்க குனிந்தால் கொதிக்க வைத்த இறாலின் கூனல்தான் ஞாபகத்துக்கு வரும். நண்பன் அவ்வாறு கூனிக் குறுகியதைப் பார்த்ததும் எனக்கு சிரிப்பு வந்து தொலைத்துவிட்டது.

வள்ளுவர் சொன்ன இடுக்கண் வருங்கால் நகுக என்பதுபோல் அன்று நான் சிரித்தது இலங்கை அரசின் நகர்காவலர்களுக்கு பிடிக்கவில்லை.

அவர்களுக்கு மட்டுமா சுந்தரேசனுக்கும் பிடிக்கவில்லை என்பது பிறகுதான் தெரிந்தது. அவன் பின்னர் தனக்குத் தெரிந்த சகல தூசண வார்த்தைகளாலும் என்னைத் திட்டியபோதுதான் அவனது கோபம் பொலிஸைவிட என்னிடம்தான் அதிகம் என்பதை புரிந்துகொண்டேன்.

இன்ஸ்பெக்டர் அவனை கண்டிக்க முனைந்தவிதம் எனக்கு நகைச்சுவையாகியது.எனது சிரிப்பு அவருக்கும் பிடிக்கவில்லை.என்னிடம் திரும்பி முகத்தை கடுமையாக்கிக் கொண்டு, "எந்தப் பாடசாலை?" எனக்கேட்டார்.

"இந்துக் கல்லூரி."

"அப்ப ஏன் இங்கு வந்தீர்கள்?"

"எனது உறவினரது வீட்டுக்கு."

"விலாசம் என்ன?"

எனது வருங்கால மனைவியின் வீடு சென்ஜோன்ஸ் கல்லூரிப் பக்கம்தான் இருந்தது. அந்த வீட்டின் விலாசத்தைக் கொடுத்தேன்.

"ஓடுங்கடா' என இருவரையும் துரத்தினார்கள் பொலிஸார்.

அந்தச்சம்பவத்திற்குப் பிறகு பல நண்பர்கள் சுந்தரேசனை எங்காவது கண்டால் "ஐயா இது சரியில்லை" என்பார்கள்.

இனி யாழ்குடாநாட்டிலிருந்து இராமேஸ்வரத்துக்கு வருகிறேன்.

அன்று மாலையில் சென்னை செல்வதற்கு ரயில் ஏறினேன். அது எனக்கு நீண்ட பயணமாக இருந்தது. முகங்களையும் மனிதர்களையும் துருவிப்பார்ப்பது எனக்கு மிகவும் விருப்பமான பொழுது போக்கு. எழுதுவதற்கான உந்துதலும் இதிலிருந்துதான் வந்திருக்கவேண்டும்.

யாழ்ப்பாணம் இந்துக்கல்லூரி விடுதியில் இருந்த காலம் சினிமா கருப்பு வெள்ளையில் இருந்து வர்ணப்படங்களாக வெளிவந்த காலம். அந்தக்காலத்தில் சினிமா எனக்கு போதையாகவே இருந்தது. ஆரம்பத்தில் சினிமாத் தியேட்டரில் வேலை செய்யவேண்டும் என்பதே எதிர்கால கனவாகவும் இருந்தது. அந்த அளவு நிழலாக இருந்தவற்றை நேசித்தேன். இந்துக் கல்லூரி விடுமுறைக்குப்பின்னர் தொடங்கும் முதல்நாளில் விடுதியில் இருந்த எங்களுக்கு எதுவித நேரக் கட்டுப்பாடும் இல்லை. எந்த நேரத்திலும் வரலாம் போகலாம் என்பதால் ஒரே நாளில் மூன்று படங்களைக் கூடப் பார்த்திருக்கிறேன்.

இப்படி தென்னிந்திய சினிமாவைப் பார்த்ததால் எங்களது மனதில் இந்தியா ஒரு வர்ணமயமான தோற்றத்தைக் கொடுத்தது. வண்ணக்கோட்டு சூட்டுகள் மட்டுமல்ல சிவப்பு, வெள்ளை என சப்பாத்து போடும் எம்ஜியார், சிவாஜி என திரையில் பார்த்திருந்தோம். இது மட்டுமா பெண்கள் எல்லோரும் அப்பிள் முகத்தில் அலைந்து திரியும் காட்சிகள் மனதில் இருந்தன. நாங்கள் படித்த தமிழ் கதைப் புத்தகங்களிலும் கருப்பானவர்களை மாநிறமானவர்கள் என்றுதான் சொல்வார்கள். எனக்கு மாநிறமென்றால் அரிசிமா கோதுமை மாவுதான் நினைவுக்கு வரும். அது எப்படி மனிதர்கள் மா நிறத்தில் இருக்கமுடியும்? என்ற கேள்வியும் நீண்ட நாட்களாக இருந்தது.

இப்படி சொல்கிறாய் ஜெயகாந்தனின் கதைகளைப் படிக்கவில்லையா? அவரது சித்தரிப்புகளில் புரிந்திருக்குமே? சேரி மக்கள்தானே அவரது கதை மாந்தர்கள் என்று இதனைப்படிப்பவர்கள் கேட்கக்கூடும். ஆனால், எனக்கோ இந்தியாவில் மாந்தர்கள் நான் பார்த்த சினிமாவிலும் படித்த கதைகளிலும் வந்தவர்கள் போல்தான் இருப்பார்கள் என்ற எண்ணம்தான் இருந்தது.

அன்றைய பயணத்தில் முழு ரயிலிலும் கோட் சூட் போட்ட மனிதர்களை காணமுடியவில்லை. இதை ஒரு சிரிப்பிற்காக எழுதவில்லை. தென் இந்திய கலாச்சாரத்தின் யதார்த்தத்தை தமிழ் சினிமாவும் கதைப் புத்தகங்களும் வெளியே இருப்பவர்களிடம் அக்காலகட்டத்தில் எவ்வாறு கொண்டு சேர்த்தன, எவ்வாறு நாம் உள்வாங்கிக் கொண்டோம் என்பதற்கு நானும் ஒரு சாட்சியாகிறேன்.

(தொடரும்)

**Noel Nadesan**

**<uthayam12@gmail.com>**

# அம்ருதா அட்சரா பதிப்பக

## வெளியீடுகள் கிடைக்குமிடம்

| | | |
|---|---|---|
| **நியூ புக் லேண்ட்ஸ்**<br>வடக்கு உஸ்மான் ரோடு,<br>தி. நகர், சென்னை-600 017.<br>தொலைபேசி : 044 - 2815 6006 | **ரம்யா புக் வேல்ட்**<br>எண். 160, தலைமைத் தபால்<br>அலுவலகம், விழுப்புரம்.<br>கைபேசி : 94431 78915 | **A.K. சந்திரய்யன் & சன்ஸ்**<br>எண். 252/161B, செரி ரோடு,<br>சேலம்.<br>தொலைபேசி : 0427 2410096 |
| **திருமால் புக் ஷாப்**<br>எண்.17/A, பெங்களூர் சாலை,<br>கிருஷ்ணகிரி.<br>கைபேசி : 94436 31941 | **விஜயா பதிப்பகம்**<br>எண். 20, ராஜா தெரு,<br>கோவை - 641 001.<br>கைபேசி : 94438 50000<br>தொலைபேசி : 2394614 | **புக்ஸ் & புக்ஸ்**<br>எண். 29, நியூ ஸ்கீம் சாலை,<br>பொள்ளாச்சி - 624 001.<br>கைபேசி : 98650 05084. |
| **அருணை புக் சென்டர்**<br>திருவூடல் தெரு,<br>திருவண்ணாமலை - 606 601.<br>கைபேசி : 92453 32365 | **நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்**<br>எண்.79-80, மேற்கு கோபுர வீதி,<br>மதுரை - 625 001.<br>தொலைபேசி : 0452-2344106 | **சர்வோதயா இலக்கியப் பண்ணை**<br>எண்.32/1, மேற்கு வெளி வீதி,<br>மதுரை-1.<br>கைபேசி : 98946 42007 |
| **குமுதம் புக் சென்டர்**<br>எண். 29, VOC பஸ் நிலையம்,<br>பழனி.<br>கைபேசி : 98428 43479 | **மகேஸ்வரி புத்தக நிலையம்**<br>எண். 29, கார்ப்பரேஷன் காம்ப்ளக்ஸ்,<br>ஜீவாபாய் மேல் நிலைப்பள்ளி அருகில்,<br>ரயில்வே ஸ்டேஷன் சாலை, திருப்பூர்.<br>கைபேசி : 94420 04254 | **பாண்டியன் புத்த அகம்**<br>எண். 793, வடக்கு மெயின் தெரு,<br>பிருந்தாவனம் கிழக்கு,<br>புதுக்கோட்டை - 622 001<br>கைபேசி : 99766 93072 |
| **பாவேந்தர் புக் ஸ்டால்**<br>எண். 1, கனகசபை நகர்,<br>நகராட்சி காலனி,<br>மருத்துவக் கல்லூரிச் சாலை,<br>தஞ்சாவூர்.<br>கைபேசி : 93600 18384 | **மார்க்கண்டேயன் புக் காலரி**<br>கும்பேஸ்வரர் சன்னதி,<br>கும்பகோணம் - 612 001.<br>கைபேசி : 96298 15580 | **இளங்கோ புக் சென்டர்**<br>எண். 51/5, நாராயணப் பிள்ளை தெரு,<br>மயிலாடுதுறை.<br>தொலைபேசி : 04364-226188 |
| **அறிவு புத்தக நிலையம்**<br>தெற்குத் தெரு, திருவாரூர்.<br>கைபேசி : 94431 25561 | **பாலா தினகரன் நியூஸ் ஏஜென்சி**<br>காரைக்கால்.<br>கைபேசி : 94431 20637 | **நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்**<br>எண். 4, பெரியார் பழைய<br>பஸ் நிலையம், திருநெல்வேலி.<br>கைபேசி : 98946 66890 |
| **ஈகிள் புக் சென்டர்**<br>எண். 1A/25, சிதம்பரம் மெயின் ரோடு,<br>பாளையங்கோட்டை ரோடு, தூத்துக்குடி.<br>கைபேசி : 94436 33333 | **சித்ரா தேவி கல்லூரி புக் சென்டர்**<br>எண். 280, மெயின் ரோடு,<br>கோவில்பட்டி - 628 501.<br>கைபேசி : 98943 25574 | **சுதர்சன் புக்ஸ்**<br>எண். 4, பெல் ஸ்டேஜ் டவுன்,<br>S.P. அலுவலகம் சாலை,<br>நாகர்கோவில் - 629 001.<br>தொலைபேசி : 04652-228445 |

**தொடர்புக்கு : 044-2435 3555 / 94440 70000**

**அம்ருதா** இதழ் தங்கள் பகுதியில் எங்கு கிடைக்கவில்லை என்பதை
தகவல் தெரிவித்து உதவுங்கள் : **96005 79149 / 97510 51526**

# அட்சரா வெளியீடுகள்



ரூ. 290/-

**கோதையின் காதல்**

வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)

ரூ. 395/-

**திருக்கோளூர் ரகசியங்கள்**

வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)





ரூ. 80/-

**சொர்ண பைரவர்**

ஸ்ரீ வேம்பு சித்தர்

ரூ. 200/-

**திவ்ய பிரபந்தம்**

வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)





ரூ. 90/-

**சுப்ரமண்ய ஸ்தோத்திரங்கள்**

நா.அங்கமுத்து முதலியார்

ரூ. 250/-

**ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ர நாமம் 1**

வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)





ரூ. 220/-

**ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ர நாமம் 1**

வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)

ரூ. 130/-

**அபிராமி அந்தாதி**




**அட்சரா பதிப்பகம்**

12 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 2ஆவது குறுக்குத் தெரு, சிஐடி நகர் , 3ஆவது பிரதான சாலை
நந்தனம், சென்னை - 600035. தொலைபேசி: 94440 7000,